அவள் தேற்றல்.

தாராச் சபதந் தருஞ்சன் பகவல்லி தன்னையும்பொய்
சேராத் தமிழ்சொரி சிந்தா மணியையுஞ் சேர்ந்தனரே
வாராப் பொருளுமுன் டோமுயன் முலெங்கள் மாதுமன
நேராக் குவன்முருகன் றோகையஞ் சாரலி னின்னுடனே. (கசுக)

கையுறையேற்றல்.

வெப்புங் குளிருஞ் சமமாக்கி யாண்டருள் வேலன்மழை
யப்பு மயூர கிரிக்கிறை வாவுன் னருளடைந்தா
டப்பு நடையறி யாள்கொளத் தக்கது தானிதென்முற்
கொப்புங் குழையு மறுப்பதுன் டோகைக் கொடுத்தருளே. ()

கிழவோன் ஆற்றல்.

மானுக்குப் புத்திரி யாகிய மானுக்கும் வானிற்றெய்வ
யானைக்கும் பாகன் மயூர கிரியனை யாண்மலர்க்கை
மேனிற்கு மென்கை முறிகொண்டபோதே விலைப்பொருளாய்
நானிற்கின் றேனெழுத் துச்சோர்வு மில்லை கடுவில்லையே. (கசுங)

இறைவன் றனக்குக் குறைநேர் பாங்கி,

இறைவிக் கவன்குறை யுணர்த்தல்.

பூமேலுன் டேயிரு தாமரை யென்பர் புயலனவுங்
காமேலுன் டேயொரு பொற்பிடி யென்பர் கடியமயின்
மாமேல் வருமுரு கன்றோகை வெற்பில் வருமனங்கே
நாமே துரைப்பது பித்தரிற் சொல்கின்ற நல்லவர்க்கே. (கசுச)

இறைவி, அறியாள்போன்று குறிப்பாள் கூறல்.

காவில் விளங்கு மயூர கிரிக்கந்தன் காலபணியும்
பாவை மயிலைக் குயிலாட் டியதும்பன் னுகத்தின்வாய்ப்
பூவை மயங்கலும் வேண்டுஞ் சுகம்வெளிப் போதலுநீ
ராவியின் மஞ்சோ டியதும் பிறவு மறிந்திலையே. (கசுரு)

பாங்கி யிறையோற் கண்டமை பகர்தல்.

கனக வரைநிகர் மாயூர வெற்பன் கருணைபெற்ற
வனகனுன் மேனியைத் தாங்கி வதனம் புயத்தினுக்கே
தினகர னுகி யொருவன்கண் டேன்பொய்யிற் சேர்ந்தபொன்மான்
வனமயிற் றேடிப் புனமயி லுன்னிடம் வந்ததுவே. (கசுசா)

பாங்கியைத் தலைவி மறைத்தல்.

அன்னங்க டாமரை சேருங் குவளை யடைந்திலகூர்
மன்னனை வென்ற வடிவேலன் றோகை வரைபவர்க்கே
சின்னம் புகன்றனை நீயுயர் வானிற் செடியுமுண்டோ
வின்ன மினத்தொ டினஞ்சேரு மென்குத லென்னலையே. (கசுஎ)

### பாங்கி, என்னைமறைப்ப தேன்னெனத் தழால்.

காலிருந் தாலு முருகன் மயில்வரைக் காரிகைகண்
வேலிருந் தாலுங் கதிர்தோன் றினுஞ்செல்ல வேண்டுமென
மாலிருந் தாலும் பலரிருந் தாலு மறைந்தொருவர்
பாலிருந் தாலுமென் னல்லா முயர்ச்சி பலிப்பதின்றே. (கசுஅ)

### இதுவுமது.

பொன்னை மறைப்பதுங் கள்ளுண் மறைப்பதும் போகமது
தன்னை மறைப்பதுஞ் சண்முகன் றேகையஞ் சாரலில்வாழ்
மின்னை மறைத்த விடையா யரிதுன்னை விட்டகலா
வென்னை மறைத்த முயற்சியென் னேவுனக் கெய்தியதே. (கசுசு)

### கையுறை புகழ்தல்.

என்சொற் கிரங்கிய தோகைச் சிலம்புக் கிறைவருக்கே
முன்சொல் சடைக்கன்னி யாம்வள்ளிக் காநடு முற்றியசொற்
பின்சொ லவளுக்குத் தாயா நகையாம் பெரிதுமுனக்
கின்சொற்பெண் ணேமன்ன ராரக் குழையென் றியம்பினரே. ()

### தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தல்.

வில்லையெ டாரம்பு பட்டதுண் டேயென்பர் மெய்யில்பல
சொல்லைவி டாரொரு மெய்ப்மொழி நாமென்பர் தோகைவெற்பி
லல்லம ருர்பக னிங்கார் குகன்பதத் தன்பிலர்போ
லில்லையு ருர்நா லெழுத்தின் குணத்தை யிசைந்தனரே. (களக)

### மறுத்தற் கருமை மாட்டல்.

தேவிற் சிறந்த சுவாமி மயில்வரைத் தென்றிசைக்கே
கோவிற் சிறந்த மருது துரையருட் கொண்டுசெய்த
வாவிக் கமலத் தனம்விளை யாட மயங்குமுன்கட்
காவிக்கு மாரன்கைக் காவிக்கும் வேற்றுமை காணினுண்டே. ()

### தலைவன், குறிப்புவேறாக நெறிப்படக் கூறல்.

அடவியெல் லாங்கொடிப் போதாய் விரிந்தன வாளுமிந்தப்
புடவியெல் லாம்புனற் போதா யிருந்தன பொன்மயில்சே
ரிடமலை யான்குகன் றன்னருள் பெற்ற விறைவர்க்குண்டோ
படரொழி யாது பனையேறும் புன்றெழில் பாலிப்பதே. (களஙு

### தலைவியை முனிதல்.

வனத்தில் வருங்கலை மானைக்கண் ணுன வலைப்படுத்தாற்
புனத்தைவிட் டேகத் தரமல்ல வேவின் புரந்தரனை
யினத்திற் பதித்த சுவாமி மயின்மலை யேந்திழையுன்
றனத்தனி மூன்றட் சரவாச நாவுக்குத் தக்கதன்றே. (களச)

### தலைவி பாங்கி, தன்னை முனிதல்.

கலைமா னெனுஞ்சொற் கவர்பொரு ளாகக் கழறினைகார்
மலைமானை மேவுமெம் மான்வேலன் றூகை மலைக்கொடியே
சிலைமா னிரண்டு தொழிலினு முன்சொற் சிறந்ததன்றோ
கொலைமா விளப்பிடி நீங்காத காவிற் குறிப்பதென்னே. (களரு)

### தன்கைக் கையுறை, யேற்றல்.

தாமரை போலுமுன் கையென்கை யெம்மனஞ் சார்புமொன்றே
காமன் மகன்மண வாளன் மயின்மலைக் காரிகையே
நீமலர்க் கன்னி கொள்வினப் புள்ளொன்றை நேர்ந்தனன்யான்
மாமதப் பூசைக்கிப் பத்திர மீந்தவர் வாழியவே. (களசு)

### இறைவி கையுறை யேற்றமை பாங்கி,இறைவற் குணர்த்தல்.

தூவியந் தோகை மலைக்கும ரேசர்க்குத் தொண்டுசெய்த
காவியங் கண்ணிக்கு நீதந்த மஞ்சரி கைக்கொடுத்தேன்
கோவையின் டாள்பின்பு லாவுமெவ் வண்ணமுங் கூடப்பிள்ளைப்
பாவையின் டாள்பின் சகிவிடு தூதும் பகர்ந்தனளே. (களஎ)

### குறியிடங் கூறல்.

கையா யுதமயி லான்கொடி காலா யுதக்கரத்தா
னுய்யா மையிலான் மயிலான் மயில்வெற்பி லொண்டொடிதன்
மெய்யாகு சாயன் மயிலா யவளின்சொன் மென்கிளியாய்ப்
பொய்யா மிடைகொடி யாய்க்குழல் காவாம் புனமதுவே. (களஅ)

### குறியிடத் திறைவியைக் கொண்டேசேறல்.

நிதமா டியசுனை யாடா திருப்பது நீதியன்றே
மதமா விளம்பிடி நீங்காத கானென்ற வார்த்தைபொய்யோ
கதியாய் நடந்தனை வேலன் மயில்வரை கண்டனையே
பததா மரைக்கர்ச்சிப் பாரா றுதாமரை பாரவரே. (களகூ)

### குறியிடத் துய்த்து நீங்கல்.

மலர்தேடி வண்டு வருஞ்செயல் போற்புவி மன்னர்பொய்யாங்
கலைதேடி முன்போல் வரினும் வருவர் கலங்கியஞ்சே [வோன்
லைதேடுங் கண்ணினில் வேண்மயில் வெற்பினம் மாற்றக்கொள்
சிலைதேடி வாங்கியஞ் சம்பும் பறித்துத் திரும்புவனே. (கஅo)

### இறையோன், இடத்தேதிர்ப் படுதல்.

தேனிற் சிறந்த கடம்பன்கை வேலன் சிகண்டிவெற்புள்
ளோனுக் கரைமனை வேலைவி டோவிறு மாந்தமுலை
யானைக் கெதிர்பொரு தோமதி யாலம் புயமலர்த்தோ
கானத்து மீனிருட் பெற்றுநின் றுய்பகற் காரிகையே. (கஅக)

### இஞ்யதல்.

ஆகம்பிரம்ம மேயென் றதுவாதல் போனா னவளெனலான்
முகங்கண் ணிதழ்பொன் வளைசெங்கை பஞ்சடி மூரன்மனைஞ்
சகங்கொங்கை பொன்னணி பெற்றவடன் னுருத்தோற் றினன்பல்
லுகங்கண்ட சேந்தன் மயில்வெற்பி லென்னினி யோதுவதே. ()

### புகழ்தல்.

மேலா மயில்வரை வேளருட் டங்கை வெகுண்டுகையான்
மாலார் சிலம்பு வளைத்தார் தெறித்திலர் மாங்குயிலீ
காலாற் சிலம்பு வளைத்துத் தெறித்திடக் கற்றுவிட்டாய்
தோலாத முப்புரந் தீயிட்டு மூவர் சுகம்பெறவே. (௧௮௩)

### விடுத்தல்.

எழுதிய சித்திர மென்மனைக் கேயுண்டென் னின்பவுருத்
தழுவிய மெய்யிலுண் டாந்துன் பிலைமயிற் றண்வரைவேன்
முழுதரு ளுண்டுமுன் காயாய்ப் பழமாய் முடிந்து முய்ந்தும்
பழுதுகொள் ளாதநும் மாயத்தை மேவு பசுங்கிளியே. (௧௮௪)

### பாங்கி, மெல்லியற் சார்ந்து கையுறை காட்டல்.

என்றைக்கும் வாழு மருது துரைகும ரேசருக்குக்
குன்றக் குடியில்வைக் குந்தென்னஞ் சோலைக் குளிரிளநீ
ரொன்றுந் தனத்துக் கிணையாகும் பார்கரும் புக்கழுத்த
நன்று நகையென லாங்காவி யாங்க ணளினமின்னே. (௧௮௫)

### மையுறு கண்ணியைப் பாங்கிற் கூட்டல்.

மேலாறு கால்கொண்ட யானைகண் மேற்பல வேங்கைகண்டாய்
நாலாறு மான குமரன் மயில்வரை நாரியரே
காலாறு முப்பங்கி லொன்று துவண்டொன்று கன்றியதான்
மாலா றொருபங்கு விசமின் னார்தொழ வாமனைக்கே. (௧௮௬)

### நீங்கித் தலைவற் கோம்படை சாற்றல்.

காதல் பெறுமன்றில் பேடையை நீங்காக் கடற்றுறைவா
மாதைதழுத் தேவருந் தாங்கினர் நீவிடின் மஞ்ஞைவரை
நாத னடையலன் போல்வடுச் சேரு நடுத்துணியு
மோதற் குருங்கும் பிணிமுக முப்பெற வுற்றிடுமே. (௧௮௭)

### விருந்து விலக்கல்.

அருவியும் வெற்பும் புயமுமுத் தாரமு மாகநினைந்
துருகும் பிடிக்கு மதயானை யாயிர வுண்டிருந்து
மருது துரைசெய்த தைப்பூசத் தேர்மிசை மஞ்ஞைவரை
முருகன் வரல்கண்டு நின்றார்க்குப் போதி முறையுரைத்தே ()

பெருந்தகை விருந்திறை, விரும்பல்.

மூன்றை யிரண்டிற் புரட்டிக் குறக்கொடி முன்கொடுக்கத்
தான்றனித் துண்டதுன் டேமயில் வெற்புறை சாமியென்மா
னூன்று மெழுத்தொரு நாலி லிரண்டைவிட் டுப்பொரித்துத்
தேன்றசை யோடஞ் செழுத்தைத் தந் தாலுண்டு செல்குவமே. ()

பாங்கியிற் கூட்டம் முற்றிற்று.

---

## பதினொன்றாவது—ஒருசார்பகற்குறி.

---

கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம், பொழுது கண்டிரங்கல்.

முலையஞ் செழுத்தைக்கச் சான்மறைத் தார்சுவை முத்தமுத்து
மெலிய பவளத்தை முத்துக்கு ளேவைக்க விண்டனர்பொற்
சிலைநிகர் பன்னிரு கையான் மயில்வரைச் செல்வர்சிவந்
துலையுமெய்க் கிட்டனர் சாந்தஞ்செம் மாலைக்கொன் றோதிலரே. ()

பாங்கி புலம்பல்.

மருவு மிறைவர் சிறுபொழு தேசொன் மறந்தனரே
திருவை விகாரம் பெருக்கினை யோபொற் சிகண்டிவரை
முருகன் குறிஞ்சி மலர்மாலை யேனுஞ்செய் மோகத்தினை
னுருவஞ் சிவக்கினு நீமுல்லை மாலையென் றோதுவனே. (ககூக)

தலைவனீடத் தலைவி வருந்தல்.

தாரா திரார்சுகந் தந்தவ ரென்னோ தடைசகிமார்
வாரா திராரினி வேலன் பைந் தோகை மயில்வரைமே
லாரா ரெனக்குற வையோ விடர்பல ராய்வர்பழி
யூரார்செய் வார்மறந் தார்மதி பானுவென் றோதியதே. (சகூஉ)

தலைவியைப் பாங்கி கழறல்.

நீருற்ற புள்ளல்லர் தேனுண்ட வண்டல்லர் நேசித்தகம்
மேருற்ற மன்னர்ச கோரங்கண் டாயெங்க ளேந்திழைநீ
சோருற்ற வன்றிற் பெடைநிகர் வாய்குகன் றோகைவெற்பாய்
தாருற்ற வேனள னைப்பிரிந் தான்முன் றமயந்தியே. (ககூங)

தலைவி, முன்னிலைப்புறமொழி மொழிதல்.

உண்டமர் நாளி லொதுங்கினர் போலென் னுழையிருந்தோர்
விண்டிருந் தாலு மிருப்பர் மயில்வரை வேலனருட்
கொண்ட விறைவரு மாயமிக் காரினிக் கூறுவதென்
வண்டனன் றென்பார் பலர்நாளி லொன்றறி வாரில்லையே. (ககூச)

இன்னுயிர்ப், பாங்கியோடு பகர்தல்.

பாரினும் வானினுந் தேவரென் றோது பகுப்புடையா
ராரினு மிக்குள்ள சேந்தன் மயின்மலை யாயிழைகேள்
பேரினுஞ் சீரினு மிக்கையுள் ளாரைப் பிரிதலெங்கே
சேரினுஞ் சேரா விடினுங் குவியுங்கைச் செம்மலரே. (௧௯௫)

பாங்கியச் சுறுத்தல்.

நினைத்த மருது மகிபதி நெஞ்சி னிறைந்துதொல்லை
வினைத்திரன் மாற்றிய கந்தன் மயில்வரை மென்கொடியே
தினைப்புனத் தேபெரு மான்சாரி வந்த திறம்பிறந்தா
லுனைப்பிள்ளை யாக்கி யெனைக்கள்ள னாக்குவ னுன்னனையே. ()

நீங்கற் கருமை தலைவி நினைந்திரங்கல்.

தாமரை மேல்விழும் வண்டுஞ்செவ் வல்லியிற் றாமரையு
மாமலை பைச்சற் றவைசக்கின்ற கையுஞ்செவ் வாய்நகையு
நாமகன் றோமலர்த் தாமகன் றாமயி னாகச்செவ்வேள்
பூமலி நாட்டிற்பைந் தாருவை நீங்கில பூங்கொடியே. (௧௯௭)

தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றல்.

பூவேந்தன் போற்றுங்குன் றக்குடி வேளருள் போற்றிப்பெற்ற
பாவேந்தர் சொல்லு மருது மகிபன் பவனியைப்போற்
றேவேந்தி ராவெச் சரிக்கையென் றோர்செழு மாப்பலவார்
மாவேந்தன் சந்தனம் பார்புன்னை மேலில் வைகுவமே. (௧௯௮)

சிறைப்புற மாகச் செறிப்பறி வுறுத்தல்

விழிபோலு மானுங் கலையுங் கலையா விறல்பெறவு
மொழிபோலும் பச்சைக் கிள்ளிவளை யாது முயன்றுறவும்
வழிகூடல் போலுங்குன் றக்குடி யான்முன் மறவர்க்கண்டு
பழிகூற நின்ற புலிநாமங் கானவர் பார்த்தனரே. (௧௯௯)

முன்னிலைப்புறமொழி மொழிந்தறிவுறுத்தல்.

வள்ளி மயிலுஞ்சேர் பயின்மலைக் கேமருந் தையன்செய்த
வெள்ளி மயிலை விரும்புங் குகனருள் வேந்தன்மருந்
தெள்ளி மயிலிலென் பொன்மயி லைப்புணர்ந் தேகினும்போற்
புள்ளி மயிலின் மேமற வீரன்பு போற்றுதலே. (௨௦௦)

இதுவுமது.

செவ்வரி யேறுங்கண் மான்றெய்வ யானைதன் சீறடிக்கே
தைவரு செங்கை முருகன் மயில்வரைச் சாரலிலே
மவ்வரி யாதியு மெல்லினத் தாறு மருந்திடினுஞ்
சவ்வரி கவ்வரி முன்றே மறத்த றருமமன்றே. (௨௦௧)

முன்னின் றுணர்த்தல்.

மாரன் பரிப்பேர் மனைப்பேர் கணைப்பேர் வனத்தெறிந்தோ
மாரொரு புல்லொளி மாலேதி நாமங்கைக் கையர்கொண்டார்
வீரப் புயன்பணி செவ்வேள் மயில்வரை மேலன்னலே
பாரக் கிரியின் மலரா தினியிரு பங்கயமே. (உ௦உ)

முன்னின் றுணர்த்தி, யோம்படை சாற்றல்.

வண்டினந் தேனுண்டப் பூவிற் றுவளு மருதநிலத்
தண்டலை யூர முருகன் மயில்வரைச் சாரலிலே
கண்டகண் பேரா திருகோங்கின் முத்தத்தைக் காட்டிநிற்கு
மொண்டொடிக் கும்மடி யேற்கும் பழியற வுன்னுகவே (உ௦௩)

மேம்படுகிழவோன், தஞ்சம்பெறுது நெஞ்சோடுகிளத்தல்.

வீடு மலையிம்பர் மெய்ப்படத் தொன்றில்விட் சேபம்வந்தாற்
கூடுவ தோவில் வரையிக வாத குறிமனமே
நாடு புகழ்ப்பன் னிருகையன் போன்மயி லுகைமின்னார்
தேடி லரிப்புன நாமும் பறவையுந் தேடினமே. (உ௦௪)

ஒருசார் பகற்குறி முற்றிற்று.

---

## பன்னிரண்டாவது—பகற்குறியிடையீடு.

---

இறைவனைப் பாங்கிகுறிவரல் விலக்கல்.

சீரா தமிழ்சொலெ னுச்சிறை மீடடவ்ர் கேகயத்தார்
பாராவில் வேதனை வைத்தவர் தோகைப் பருப்பத்தீர்
தாராள மாய்மந்தி வேவ்னகமு னேடிச் சரிப்பினன்றோ
நீரா வயின்வர லேன்லங் காவலு நீங்கினமே. (உ௦௫)

இறைவியைக் குறிவரல் விலக்கல். [டத்தி

உன்னுளென் னேயென்னுந் தூங்காளென் னேயென்னு மோரி
னண்ணுளென் னேயென்னும் பெண்குற வள்ளி நடுங்கவிரைந்
தண்ணு வருக்வென் றூன்மயில் வெற்பினம் மன்னையினிக்
கண்ணே கடத்தினை யேகவ ணேடு கடத்தினையே. (உ௦௬)

இறைமகள், ஆடிடம்நோக்கி யழிதல்.

பாரதத் தோர்தரு நீங்கா விரதஞ்செய் பட்சியின
நீரத னுனிலைத் தாண்மற வாம னெடி துநின்றீர்
வீர நவர்பணி வேலுண்ட யான்மயில் வெற்பிறைவர்
சார லிளங்கிள்ளை யேமறந் தார்பொற் றனக்கிள்ளையே. (உ௦௭)

### பாங்கி, ஆடிடம்விடுத்துக்கொண்டகறல்.

குருகின மேமுரு கோன்மயில் வெற்பற் குருகினமே
மருமலி வண்டின மேவரிற் சொல்லுது வண்டினமே
யொருவரும் பாரல ரேபழி யூருரைப் பாரலரோ
பொருமலை யேசொல்லை யேவந்து போகும் பொருமலையே. ()

### பின்னாள், நெடுந்தகை குறிவயினீடுசென்றிரங்கல்.

அயிலணி கையான் மயில்வரை யிதெனி லாடல்கொண்ட
மயிலதெங் கேசந்தி ராங்கமெங் கேபெரு வாசமெங்கே
செயலறக் கொத்து மரவமெங் கேயிடஞ் சேர்ந்தசொன்னக்
குயிலுமெங் கேயில்லை யேயினி யேதொன்றுங் கூறிலமே (௨0௯)

### வறுங்களநாடிமறுகல்.

புண்ணியத் தோகை மயில்வரை வேலனைப் போற்றலர்போ
லெண்ணிய காரியங் கூடிலை யேயித னேதினையே
பெண்ணிலை யோபுனம் வேறோ கனவோ பெறுவதுண்டோ
கண்ணிருந் தார்க்கல்ல வோகாண லாஞ்ச களச்சத்தியே (௨௧0)

### குறுந்தொடி, வாழுமூர்நோக்கிமதிமயங்கல்.

எழுத மேட்டுக்கு நீரிறைப் பாரின்றெட் டாக்கொம்பிற்றே
னூறு முடவற்கு வாராது தோகை வெற் பாரடிப்பே
றாழுதன்பில்ல வருக்குநெஞ் சேயிஃ தொள்ளிழையாள்
பிறாரினிச்செய்ய லாவதின் றேதுன்பஞ் சேர்ந்தனமே. (௨௧௧)

### இதுவு மது.

தேமாப் பழுக்கு மயில்வெற்பின் வேலர் திருவருள்போன்
மாமான் மலர்மனைச் சென்றன ளேயவள் வாழுஞ்சிற்றா
ராமீது வானத் தமுதம் விரும்பி யகங்குழைந்து
பூமேவு மக்க டவம்புரிந் தாலும் புசிப்பதின்றே. (௨.௧௨)

பகற்குறி யிடையீடு முற்றிற்று.

---

## பதின்மூன்றாவது—இரவுக்குறி.

---

### இறையோன் இருட்குறி வேண்டல்.

கூந்த லெனவிருண் டேநீட லாற்கண்ணுக் குச்சரியா
மேந்தற் குவளை மலர்த்தின தாலயி லேந்துங்கையான்
சாந்த மயில்வெற்பி னம்விரும் பார்விழித் தாமரைக்கே
காந்தி குறைப்பத னாலிருட் போதல் கருதினமே. (௨௧௩)

டாங்கி, நெறியினதருமை கூறல்.

இடைவிடுத் தான்முலை யாந்தலை போக்கி லெழுந்தலையா
மடையக் குறிக்கிற் கொலைச்செந்து வாம தடிக்கொன் றதாம்
படர்வழியெங்கு மயில்வெற்பர் தாதை பணிசுற்றுமாந்
தொடையுறு பாதையொன் றுண்டறி யாய்வரச் சொல்வதெங்கே.

இறையோன், நெறியினதெளிமை கூறல்.

ஆறு பெரிதில்லைக் காவலை யஞ்சில ஞன்மைவன்மீ
னூறுமுண் டோதிரு மாலாழி யுண்டன் புருவசுரர்
நீறு படச்செய்த வேலோன் மயில்வெற்பி னேரிழைகான்
சீறும்வெம் பாம்புக்குப் பெண்ணுங் கருடந் தியானமுண்டே. ()

பாங்கி, அவனுட் டணியியல் வினுதல்.

ஆயிரம் வெள்ளத்தொ டாளி முகனை யசியொன் றினுன்
மாயப் புரிந்தவன் போற்றுஞ்சு வாமி மயில்வரையோய்
நீயுன் னகரின் மருவலர் மேன்மை நிகழ்த்திமனை
மேய்வில்குழையா ரையுநம் பினவரை யுஞ்சொல்லுமே. (உகசு)

கிழவோன், அவள்நாட் டணியியல் வினுதல்.

அறியாரைப் போன்று குறியா துரைக்கின்ற வந்துறைபோ
னெறிசே ரெளிமைக்குப் பின்னிது கூறினை நேசமிதென்
றறியேன் முருகன் மயில்வரை யாய்நும் மணிநகர்ப்பூஞ்
செறிவே தெதுவுங்கள் போன் றும்மைத் தந்த செழுஞ்சனையே ()

அவற்குத், தன்னுட் டணியியல் பாங்கிசாற்றல்.

ஆயா தவர்மனம் போன்றிரு ளேங்குங்கற் றுயர்ந்தவர்போ
லோபா மனம்பெறுஞ் சேந்தன் மயில்வெற் புறையண்ணலே
காயாத மாவென்றும் பூவாத மாவைக்கை யாலழித்துப்
பாய்ந்த வேங்கையஞ் சுஞ்சோலை யாங்கள் பயிலிடமே. (உசஅ)

இறைவிக் கிறைவன் குறையறி வுறுத்தல்.

சங்கையை யெண்ணிய பேரைவை யான்புகழ்ந் தாரைவைப்பான்
புங்கவ ரிற்சன் முகவேலன் குன்றகைப் பொருப்பணங்கே [ன்றே
செங்கையில் வேலும் விரைவுங்கொண் டெம்மண்ணல் சேர்தன
கொங்கையை நாடி யிடைதேடு முன்மலர்க் கூந்தலிலே. (உகசு)

நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தல்.

கான வரும்படைச் செல்வர்களே தொழுக் கந்தனையே
வானவர் மங்கையர் செல்வர்க ளேபொன் மயில்வரைமேற்
கூனறு கானிலெங் குஞ்சர மேயெழுங் குஞ்சரமே
யானில் வருமம் புலியே யினியெழு மம்புலியே. (உஉ0)

### நேரிழை பாங்கியோடு நேர்ந்துரைத்தல்.

உரவினை செய்பவர் மாயையென் பாரறி வொன்றுதற்கோர்
திருமுகங் கூடப் பெறுஞ்சிவன் றேகைச் சிலம்பன்னலார்
வரவினைக் கூறனு நன்றே யுனது மனமுநன்றே
யிரவினுக் கஞ்சுவ தில்லைகொ லேழைக் கிரங்கவரே. (௨௨௧)

### நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தல்.

ஒருவிரல் காட்டிக் குழைகாட்டிக் கைகுவித் தோங்கிச்செங்கை
பொருநெறி வைத்தனள் கூவி கரும்பார் புதல்வர்க்குண்டோ
முருகன் மயில்வரை மேலன்னங் காட்டிக்கை மூக்கில்வைத்தே
யிருவிரல் காட்டி யொருவிழி மூடின ளேந்திழையே. (௨௨௨)

### குறியிடை நிறீஇத் தாய்துயி லறிதல்.

அகத்தான் வருந்திய வன்பருக் கன்ப னமுகுளசன்
முகத்தான்மயில்வெற் பிலற்புதங்கண்டேன்மொழிவன்பெண்ணே
பகற்காக்குஞ் சண்பகஞ் சேராது தும்பியென் பார்களுரை
மிகத்தா னமுத மதுவுண்டு பூமெத்தை மேலுற்றதே. (௨௨௩)

### இறைவிக் கிறைவன் வரவறி வுறுத்தல்.

தோழியர் தூங்கினர் நற்றாயுந் துஞ்சின டோய்ந்துடையார்
வாழியர் நங்கொல்லைச் சண்பகச் சாவின் மலர்மெத்தைமேற்
கோழியர் குன்றக் குடியார்கை வேலன்ன கூர்ங்கண்ணியே
மேழியர் மாலை யெனவே யிருண்டது விண்கங்குலே. (௨௨௪)

### அவட்கொண்டு சேறல்.

பால்சர்க் கரைபழங் கர்ப்பூரம் வெற்றிலை பாக்குமுதற்
சாலவங் குண்டு மணிச்சிலம் பென்மடித் தாங்கினன்சான்
சூலி மகன்குகன் றேகைவெற் பார்மெய்ச் சுகம்பெறவா
கோலைப்பெண் ணுக்கித் துகின்மூடிப் பஞ்சணைக் குட்படுத்தே.()

### குறியுய்த் தகறல்.

கர்ப்பூர மோர்பங்கு வைத்தளித் தார்பழுக் காயிலையி
தற்பூ ரவர்மன மாழுத்தர் கான்குக ளூர்சிகண்டி
வெற்பூ ரிரவைநஞ் சாதியைச் சாரின் மிறைசொல்வதார்
நிற்பீர் மருவல ரைத்தலை சாய்ப்ப னிமிடத்திலே. (௨௨௬)

### வண்டுறை தாரோன் வந்தெதிர்ப்படுதல்.

செடிதேடி மந்த கபம்பிடி தேடுஞ் சிறந்தவின்பப்
பிடிதேடு மோவடி வேலன் மயூரப் பிறங்கலிலே
யடிமே லடியிட்டை யோகாடெ லாம்விழி யாக்கிநின்றுய்
விடியா விடினல்ல வோமுக மாமதி மேன்மைமகளே. (௨௨௭)

பெருமக ளாற்றின தருமைநினைந் திரங்கல்.

சாதிசஞ் சாலிக ஞாயமெம் மூர்வரத் தக்கதன்று
மீதுறை சஞ்சா லிகபுட்ப ஞாயத்தின் மேவினிர்நீ
ரோது மறைபணி சேந்தன் மயில்வரை யுற்றவர்க
டதையு றாத னெறி கண்டெனைச் சேர்ந்தனிரே. (உஉஅ)

புரவலன் றேற்றல்.

இடைநினைந் தாற்கன்னி வாகன மென்செய்யு மேய்ந்தவல்குற்
படநினைந் தாலரி பாயனு மென்செயும் பாற்கடல்சேர் [கட்
விடைசுமந் தான்மகன் றோகைவெற் பாய்செற்றம்வேண்டியென்
கடைசிவந் தாலெங்கு நம்மூர் சிவக்குங் கனற்கொழுந்தே. ()

புணர்தல்.

மறையாத மின்மலர் வாடாக் கொடியை வகையுணவிற்
குறையா வமுத மெனுநீ தமயந்தி கொண்டிடதத்
திறைநா னெனிற்குகன் றோகைவெற் பிற்கற்ற தில்லை கொல்லோ
நிறைதே ருருத்தெரி யாமந்தி ரத்தி னெறிநளனே. (உஉ௦)

புகழ்தல்.

ஆல மெனுமசு ரேசனை வேல்விட் டறுத்தமரர்
தாலி பதித்த முருகன் மயில்வரைத் தையலரே
மேலை யடைபலர் முன்னே கலகல வென்பதனாற்
காலிற் சிலம்புக்கு நேரல்ல வேசிவன் கைச்சிலம்பே. (உ௩க)

இறைமகளிறைவனைக் குறிவிலக்கல்.

இன்னுமை வேண்டி னிரவி லெழுகவென் றேபெரியோர்
சொன்னர் பொய் யன்று முருகேசன்றுள்பணிதோகைவெற்பா
பன்னுடர் போற்றச் சிவந்தகை கால்களென் பங்கயக்கன்
டன்னுற் கறுத்தன பார்நீயென் னச்சந் தவிர்ந்திடவே. (உ௩உ)

அவன், இறைவியையில்வயின் விடுத்தல்.

முத்தாயர் கேள்விக்கு வைத்தீர்கொ றேழியர் மூன்றுகட்டுங்
கைத்தாளிட் டீர்கொல்பொய்த் தாளிட் டனிர்கொல் கருணையெ
வைத்தான் முருகன்மயில்வெற்பினீர்சென் மனங்கலக்கு [ன்மேல்
வித்தேன் கதிர்தோற் றினுங்கஞ்சங் கொள்ளா விகசிதமே. ()

இறைவியை, எய்திப்பாங்கி கையுறைகாட்டல்.

கான்கொண்ட கூந்த லிளம்பிடி யேகால் கடிதுசென்று
நான்கொண்டு வந்த மலர்கரத் தேந்தி னளினத்திலோர்
வான்கொண்ட நீல மலர்ந்ததென் பார்பச்சை வண்டிதென்பார்
தேன்கொண்ட சோலை முருகன் மயில்வரைச் செல்வர்களே. ()

### இற்கொண் டேகல்.

பாலிக்குச் சொல்லினும் வேல்சிவப்பானதைப்பாளிதங்கொ[வாய்
ணிலிக்குச் சொல்லினும்பொல்லாப்பென்றுப்முனிகழ்த்தல்செல்
ருலிக்கு மைந்தன் மயில்வெற்பி லெல்லாந் தூவண்டனவே
காலிக்குஞ் சொற்றிடு மேகண்டைச் சேலைக் கமகமப்பே. ()

### பிற்சென்றிறைவனை, வரவு விலக்கல்.

கன்ன வடுவை யிதழை முல்லைக் கலந்தன் றுநீ
சொன்ன படிமறைத் தான்மறைத் தாளல்லள் சோர்வைமயில்
வன்னி முருகன் மயில்வரை மேலிறை வாவருத
லின்னம் பொறுப்பவளோபல்லைக் கேற்ற வெழுந்தவளே. (௨௯௬)

### பெருமகன் மயங்கல்.

கொங்கைக்கு மார்பின் னகைக்குங் கலைக்குமக் கொங்கைதொட்ட
செங்கைக்குங் குற்ற முரைத்தன ளேயினிச் செய்வதென்னே
துங்க மயில்வரை வேலனு நீயுந் துணையன்றிபோர்
வங்க நடந்திடு மேபெரு கோதை மயற்கடற்கே. (௨௯௭)

### தோழி தலைமக யேர்கிளந்து விடுத்தல்.

ஆதி மலரை நினைக்கு முடியு மயலவர்சொற்
பாதையிற் கொண்டு மகிழு முரம்விழல் பார்க்குங்கொடி
யோதை குறிக்கு மயில்வரை யான்பத முன்னுமிந்தக்
காதலிக் குத்தப்பு நீக்குவ தென்னூர்க் கனகதப்பே. (௨௯௮)

### திருமகட் புணர்ந்தவன் சேறல்.

மாவென்ற கன்னியென் னூர்க்கேகற் கென்றடை வையமெலாங்
கூவென்ற ஞரைவென் றேன்மயில் வெற்பிற் குறுகுமிருட்
காவென்று மாவென் றுஞ் சொன்னதெல் லாநிற்க காமமுற்றை
போவென்ற போதண்ட கோளமுந் திப்பட் டொளிவிடுமே.

இரவுக்குறி முற்றிற்று.



## பதினுன் காவது—இரவுக்குறி யிடையீடு.



### இறைவிக்கிகுளை யிறைவர வுணர்த்துதல்.

வின்னி னுதித்த பதினொரு கோடி விபுதருக்காக்
கன்னி னுதித்த முருகன் மயில்வரைக் காதலியே
யென்னி னுதித்தவுன் கானுஞ் சிலம்பு மிருகையும்போன்
மன்னி னுதித்தன வோபட்சி சால மலர்வனத்தே. (௨௪௦)

### தான்குறி மருண்டமை தலைவியவட்குரைத்தல்.

வேறு புகலற்ற வேகாக்ர சித்த வியப்பிலிடை
யூறு வராதென் றிருந்தேன்பெண் ணேமர மொன்றைபொன்றுச்
சூறை படுத்த விழுமொலி யாற்பசுந் தோகைவெற்பா
ராறு பொறிகொண்ட காற்று மருட்டிற்றெ னைம்பொறியே. ()

### பாங்கி தலைவன் றீங்கெடுத் தியம்பல்.

காட்டவைத் தார்கல்லைச் சொல்லைவைத் தார்பொய்யைக் கால்வயிற்றுக், கூட்டவைத் தார்கையைத் தன்மெய்யைக் கங்கையுள் ளங்கைத்தொட்டி, லாட்டவைத் தார்மயில் வெற்பார்செய் நன்றியென் னன்றியுங்கை, நீட்டவைத் தார்புன்னை மேற்பாம்பை யென்ன நினைப்பினியே. (உசஉ)

### புலந்தவன் போதல்.

சரம்போ னிலையர்பொன் போலிலங் கும்மனஞ் சஞ்சலத்தாற்
குரங்கா மெனச்சொன் னதுநிச மாயின கூந்தல்வனம்
பரந்தோடித் தென்னையில் வாழையின் மாவிற் பருங்கமுகி
னிரந்தோ டியுமில்லை வேலன் மயில்வெற்பி னேரிழையே. (உசங)

### புலர்ந்தபின் வறுங்களந்,தலைவிகண்டிரங்கல்.

பந்தினைக் காய்த்தது புன்னைபொன் மாலையும் பங்கயமுஞ்
சந்தனம் பூத்தது பேசாக் கிளிமுல்லை தந்ததுண்டே
செந்தின் முருகன் மயில்வரை மேலன்னால் சென்றனரோ
பிந்தின ரோநிற்கின் றுரோகண் ணேயுன்னைப் பெற்றென்னையே.()

### தன்றுணைக் குரைத்தல்.

அன லுக்கு ளாகிச் சரவணத் தெய்தி யறுவர்கொங்கை
வனசத்தின் பா லுண்ட வன்றேறகை வெற்பினர் வாரலரே
லுனையொற்றை யன்றிலென் பார்நக ரோர்மல ரோன்குருவி
தனிமெய்ப் பொருளமு தாகவுன் டன்னைவின் டானெய்துமே.()

### தலைமகளவலம் பாங்கிதணித்தல்.

ஆறுரு வாய்ச்சுனைத் தொட்டி லுளாடியெ னம்மைகைக்கோர்
பேறுரு வானசு வாமிபைந் தோகைப் பிறங்கலுள்ளாய்
கூறுவ ரோபொய்ம்மை கண்டென் பலமின் குறிவிடிந்து
தேறுவையோ கொம்புபார்நேர்ந்தும் வீண்படச்சென் றனரே. ()

### இறைவன்மேற் பாங்கி குறிபிழைப் பேற்றல்.

விடையி லிருவ ருடனேறி முன்வெள்ளி வெற்பகத்தே
நடைபுரி வேலன் மயூரவெற் பாவிங்கு நண்ணினையே
லடைகுவன் யானு கிலுந்துணை யாய்வரற் காய்ந்ததென்னை
மடறுரு மோகமு கங்காயுள் ளன்பு மறந்தனையே. (உசஎ)

### இறைவிமே லிறைவன் குறிபிழைப் பேற்றல்.

தொட்டி லுற் றாடி யுமைக்குப தேசஞ் சொலும்பொருளின்
மட்டறி வேலன் மயூர கிரிமட மான்பிணையே
பட்டினி யில்லைப் பகலென்னை மில்லைப் பகருமக்குக்
கட்டிலு மெத்தையு மில்லை யெளியேன் கருத்திடத்தே. (௨௪௮)

### அவள்குறிமருண்டமை யவளாவற் கியம்பல்.

விழுக்கு முலக வடுக்கினை மாற்றி விலங்கலெல்லா
மழுக்கி யெழுப்பு முருகன் மயில்வெற்பி னரண்ணலே
குழுக்கென்ற கேணியும் விண்ணொன்ற வோசையுங் கூவத்திலே
தொழுக்கென் றதுமுன் குறியென்றல் லெல்லாஞ் சுழன்றனளே.

### அவன்மொழிக் கோடுமைசேன் றவளாவட்கியம்பல்.

கின்னரி வீணையி னுதின் றேசிங்கங் கொர்ச்சிக்கின்மேன்
மன்னுறு மிந்திரன்வெம்போரை வென்றான்மயில்வெற்பின்வாய்ப்
புன்னை யரும்புமுற் றத்தனைத் தேனென் புகன்றினிய
னன்னம் பறந்தது வோவென் றனரிறை யாயிழையே. (௨௫௦)

### என்பிழைப் பன்றேன் றிறைவிநோதல்.

தூங்கின னோதூங் கிலனோ தெரிந்திலன் சொல்லறிந்தா
ரீங்கின ரோநீங் கிலரோ தலைவரென் னெஞ்சிருந்தா
ரோங்கிய தேவர்கள் வாழ வருளு மிறைவன்மயி
லோங்கல ரென்றோர் மிடாவையுற் றஞ்சிப்பி னுற்றதுண்டே. ()

### தாய், துஞ்சாமை.

இலக்கத்தொன்பானெனும்வீரர்துணைக்கொண் டெழுந்துதகாக்
கலக்கந் தவிர்த்தசு வாமி மயில்வரைக் காரிகையே
துலக்குபொற் பாபத்தை முல்லையி லேவைத்துந் துஞ்சுவனோ
பலிக்க வுழக்கின்ற வாபத்தைப் போக்கிப் பயந்தனனே. (௨௫௨)

### நாய், துஞ்சாமை.

பேசு பிரமனை மாற்றிச் சிருட்டி பெருக்கிமனைக்
கீசன் வரச்செய்த வேலன் மயில்வரை யேந்திழையே
யோசனை பாரித்த வூர்மலர்ப் பொய்கையுண் ணும்புனல்யாம்
பாசியை நீக்கியிக் நீர்குடிப் பாரெவர் பார்மன்னரே. (௨௫௩)

### ஊர் துஞ்சாமை.

முட்டற்ற விரா யிரம்வெள்ளம் பூதமு மோதியநூற்
றெட்டுத் தலைவரும் பெற்றோன் மயில்வெற்பி லேந்திழையே
கொட்டிய மேளமுங் கூத்தையும் பாருயிர் கொண்டவரிச்
சட்டத்தி லாறு மிடையி லிரண்டுந் தவிப்பில்லையே. (௨௫௪)

காவலர் கடுகுதல்.

மனவேகத் தேரு மருத்தெனும் பாகும் வரிச்சிலையுஞ்
சினவாழி யுஞ்சத்தி வேனுர்பெற் றோன்மயிற் றிண்சிலம்பார்
புனமேல் வருவர் தடையில்லை யின்று புகிற்கொடிதாந்
தனியான சோலைப் பெயரோடு பூப்பெயர் சார்ந்திடினே. (உருரு)

நிலவு வெளிப் படுதல்.

முத்தக் குடைநிழற் றேவர்கள் சூழ முதற்சமரி
லத்தி முகனைக்கொன் றோன்மயில் வெற்பினி லாயிழையே
பத்துப் பெயரோ டொருவர்வந் தாலும் பவுஞ்சிதென்பார்
சுத்தக்கு பேரன்வந் தாலெவர் தூங்குவர் சொல்லுகவே. (உருசு)

கூகை குழறுதல்.

அசுர மெனப்பல் லுயிர்தோறு மந்தரி யாமிபுமாய்ச்
சுகநிலை யான முருகன் மயில்வரைத் தோகையரே
ககரத் திரண்டினி லாறென்ப தேறிக் கதறுமென்றாற்
பகர்பதி னென்று தடையென்று நீங்கும் பதியைவிட்டே. (உருஎ)

கோழி குரற்காட்டுதல்.

ஒருசாதி யிற்பிறந் தேயஞ்சு சாதி யுடன்கலந்து
வருநாளி லூன்முதன் மாறிய மூட மனக்குருகார்
பரிவா யெனக்குரு கார்வே லன்றோகைப் பருப்பதத்தா
ரருகா மனையிற் பறையடித் தால்வர லாவதெங்கே. (உருஅ)

இரவுக்குறியிடையீடு முற்றிற்று.

---

## பதினைந்தாவது—வரைதல்வேட்கை.

---

(பாங்கி) பருவரல்வினவல்.

மாதாவுந் தந்தையும் பிள்ளையுஞ் சுற்றமு மற்றுமெல்லா
நீதா னெனநின் றவன்மயில் வெற்பினி னின்ரமதி
மீதே பிறைமேற் பிறையுங்கொவ் வைக்கனி மேலிலையு
மாதே தரித்தில யென்னே பருவரல் வந்ததுவே. (உருகூ)

பாங்கிக்கிறைவி, அருமறை செவிலி யறிந்தமை கூறல்.

கோவைப் பழத்தினிற் காயும் வடுவுங் கொடுத்தவரார்
பாவைக்கென் றானன்னை யுன்னைக் கிளியைப் பகர்ந்தொழித்தேன்
பூவிற் கனத்தை மறைத்த க்ரவுஞ்சப் பொருப்பையங்கைத்
தேவிக் களித்த மயிலோன் மயில்வரைச் சேயிழையே. (உசும)

தலைமகன் வருந்தோழிற் கருமைசாற்றல்.

ஒருநாளும் பாதி யதுநாலு கூறதி லொன்றுதள்ளி
வருமுன்று கூறுக்கொ ரேழிடை யூறு வருங்கொடி தாய்த்
திருவே ரகத்தி லிருந்தோன் மயில்வெற்பர் சேயிழையே
யிருனாள்வருவதெங் கேகுற்றம் பார்க்கின்றவில்லத்திலே. (உசுக)

தலைமக னூர்க்குச் சேலவோருப் படுதல்.

படையோ டெழுந்துவின் னோர்சேய்கல் லூரிற் பணியச்செந்தி
லடைவார் மயில்வெற்பி னூனோர் விலைச்சரக் கானதினாற்
கடையூடு போய்க்கப்ப லேறிப் பலர்கள் படச்சென்றுபொன் ()
கொடையாளர் வீட்டிற் புகுந்தே சரக்குப்பை கூடுவனே.

பாங்கி இறைவனைப் பழித்தல்.

விரும்பிமுன் காட்டின் மனமஞ்சி லீரென்று வேண்டியுன்கா
திரும்பிய போதுகல் லென்று ரதுநல்ல செப்பல்லவே
கரும்பு மொழிவள்ளி யார்மயில் வெற்பர் கருணையென்னே
குரும்பையி லேயென்றுங் கோவாத முத்தங் குவிந்ததுவே. ()

பூங்கோடி, இறையோன்றன்னை நோந்தியற் படமோழிதல்.

வானுண்ட தேசிகன் சொற்படிக் கேவிறல் வாகுவைநீர்
மீனுண்ட வூர்க்குப் புகவிடுத் தோன்மயில் வெற்பனையாய்
நானுண்டு நீயுண்டென் றோர்பூத் தலைவைத்த நண்பர்விடார்
தேனுண்ட வண்டினந் தேடாத் தருவில்லைத் தேசத்திலே. ()

கனவுநலி புரைத்தல்.

மாகாயம் பாய்ந்திந்தத் தேவையிற் சொர்ன மலையொடுசுகி
மீகி ழுயர்ந்தவன் போற்றிய வேன்மயில் வெற்பர் வந்தார்
தோகாயென் றார்முத்தந் தந்தார் படுத்தார் துயில்புரிந்தா
ராகாயப் பூவு முயற்கொம்பு மாயின ராரணங்கே. (உசுரு)

கவினழி புரைத்தல்.

அடியைப் படர விலங்கையி லூன்றி யதிர்கடற்குக்
குடியைப் படரவிட் டோன்பணி வேன்மயிற் கோத்திரத்தார்
படியைப் படரவிட் டார்பழி யாம்பயி ரைப்பசலைக்
கொடியைப் படரவிட் டார்மணம் பூசிய குன்றத்திலே. (உசுசு)

தன்றுயர் தலைவற் குணர்த்தல் வேண்டல்.

மீறித் தனுவிட்டு நாண்போன வாறும் விழுந்திடுஞ்சிற்
றூறக் கரைப்பட்ட தஞ்சொல்லு வாருள ராயினன்றே
யேறுற்ற வானத் திலங்கேசன் பொன்முடி யாயிரமுஞ்
சூறைப் படுத்தான் றெழுப்வேள் பைந்தோகைச்சுரும்பவர்க்கே.

துன்புறுபாங்கி சொல்லெனச்சொல்லல்.

மால்வைத் தசுரர் வெருண்டோட வீர மயேந்திரத்திற்
கால்வைத்த வன்பணி வேண்மயில் வெற்புறை காவலர்க்கே
சேல்வைத்த கண்ணிணை யாயென் னியம்புதி சேர்கிளிக்குப்
பால்வைத் தருத்தில ரோவளர்ப் போரிந்தப் பாரகத்தே. (உசுஅ)

அலர்பார்த்துற்ற வச்சக்கிளவி.

இழகு மணிக்குங் குமக்குரும் பைக்கொடி யேயுனது
விழிவடு வேனுங் குழைவாய்தல் பெற்றது விண்ணமெல்லாந்
தொழும்வடி வேலன் மயில்வெற்பி னுன்னனை சொல்லிபவாய்
பழமென வாயு மலரைக் கொடுத்துப் பயப்பித்ததே. (உசுகூ)

ஆறுபார்த்துற்ற வச்சக்கிளவி.

ஓதும் வடக்கு மதில்காவ லாளியை யூறுசெய்த
சோதி பணியும் பரஞ்சோதி யார்பசுந் தோகைவெற்பர்
பாதி யிரவில் வருதனன் றேவரைப் பாந்தளுண்டே
தீது செலப்பணி யேவரி னூர்க்குச் செலப்பணியே. (உஎ௦)

காமமிக்க கழிபடர் கிளவி.

மங்காத சீர்த்தி பெறவீர வாகுக்கு வான்கதிர்பொற்
சிங்கா சனஞ்சபைச் சீந்தவன் றோகைச் சிலம்பண்ணலார்
தங்காதல் கண்டனி ரேகிளி காண்மலர்த் தண்டலைகாள்
பொங்கீர் புளினங்க ளேதுயர் கூறும் புளினங்களே. (உஎக)

தன்னுட்கையா றெய்திடு கிளவி.

திரிகரிப் போர்வையன் மைந்தன் மயூரச் சிலம்பண்ணலா
ரொருகரி தாயிருந் தோர்நாட் டுயர வுரைத்தவெஞ்சொற்
பரிகரி யென்றதுங் கோட்டானை தாழக்கைப் பற்றியபோ
தரிகரி யென்றதும் வீணே மதியே யதுமதியே. (உஎஉ)

நெறிவிலக்குவித்தல்.

மைப்பார் புகழு மருது துரைவேண் மயில்வரைமேற்
றைப்பூசத் தேரில் வரச்செய் வதுமன்ன தானஞ்செய்யு
மப்பூ மியுங்கண் டிடவர லாமென் றறைவருமே
லெப்பூ சனுமுண்டு மைப்பூச னுண்டெனி லேதமின்றே. (உஎஙு)

குறி விலக்கு வித்தல்.

ஏவிய தாயர் குறிவிலக் காகியு மென்னுடம்பிற்
பாவி யொருவன் கணைபட்ட சூழ்ச்சி பகர்சகியே
காவடி கொண்டுமுப் பத்துமுக் கோடியர் கைதொழுத
சேவடி யான்செந்தி லான்பசுந் தோகைச்சிலம்பவர்க்கே. (உஎச)

வெறிவிலக் குவித்தல்.

முன்னிய சூரனைச் சொல்லாமை சொல்லி முனிந்தவர்கள்
பின்னிட வந்தோன் பணிகுநன் றோகைப் பிறங்கலன்னை
பொன்னிசை மேடத்தை முன்னிட்டுப் பூசை புரிந்திடினுங்
கன்னியுஞ் சிங்கமு நீங்காதென் றோது கனங்குழையே. (உஎரு)

பிறர்விலக்குவித்தல்.

அன்றைத் தினத்தி லசுரேசர் பல்லா யிரரையவன்
முன்றிற் படுத்தான் பணிவேன் மயில்வரை மொய்குழலே
யின்றைக் கிரப்பார்க் கிசைவதுண் டோபுக மென்னையிவ்வூர்
குன்றக் குடியெனப் பேரிருந் தாலுங்குன் றாக்குடியே. (உஎசு)

சூரவரை வரைவெதிர் கொள்ளுவித்தல்.

சொன்றிக் குறிசி யெனப்பதின் காவத தூரந்தெவ்வூர்
வென்றிக் கனலிட் டவன்பணி வேன்மயில் வெற்பணங்கே
குன்றக் குடிக்கா வலர்மனை மிக்கென்று கூறினையே
லன்றைக் கனைநனி யாங்கார நீங்கும்பின் னுவதுண்டே. (உஎஎ)

வரைதல் வேட்கை முற்றிற்று.



## பதினாறுவது—வரைவுகடாதல்.



வினவிய செவிலிக்கு மறைத்தமை விளம்பல்.

எப்போ தருள்புரி வீரென்ற வார்த்தை யிரவிற்கொண்டு
துப்போ திகழ்மின்னை யென்னையென் றுளன்னை தூங்கமயர்க்
கப்போது தூது தெரித்தவன் றோகை யணிவெற்பரே
செப்போதி னுண்மலர் கொய்மாதர் மேலிட்டுச் சீர்செ·நவே. ()

அலரறிவுத்தல்.

சீரார் சயந்தனுந் தேவரும் போற்றுஞ் சிறைவினிற்கண்
ணோரான வன்மயில் வெற்பிறை வாவிவ ணோர்பழிநீ
வாராத போதி லரும்பாகும் வந்தான் மலரலரா
மீரா திடைப்பட் டிடில்வடு வாமென் றிரங்கினளே. (உஎஅ)

தாயறிவுணர்த்தல்.

குறியான் வறுவென்ற போதே கணங்கள் குரைகடலே
நெறியாக வானெறி வந்தோன் மயில்வெற்பி னேரண்ணலே
பறவாத வன்னமு முண்ணுத வன்னமும் பார்த்திலளென்
றறவே வெகுண்டு குறித்தாளெம் மன்னை யருங்களவே. (உஎகூ)

வெறியச்சுறுத்தல்.

வாட்டமில் வீர ருடனேம கூடத்தின் மாமுனிவர்
பாட்டுக் கருள்செய் திருந்தோன் மயில்வெற்பிற் பார்மன்னனே
கோட்டிற் செறிமுலை பாரா யெனிலிந்தக் கோயிலிற்பா
ராட்டுக்கு முன்மத் தளதாள வோசை யதிர்ந்திடுமே. (உ அ ௦)

பிறர்வரை வுணர்த்தல்.

ஆங்கார முற்றனன் வந்தா னிலனென் றடையலரூர்
தாங்கானா நின்றவன் றோகைவெற் பாருந் தனித்துரையே
யேங்காத வுங்களி லூரு முலகமு மென்படுமோ
நீங்காத மானுக்குக் கொல்லாத வேங்கையை நேர்குவரே. (உ அ க)

வரைவெதிர் வுணர்த்தல்.

பூமலி சூரன் மகன்போரை வென்றவன் போற்றுஞ்செவ்வேள்
காமலி தோகைவெற் பாமணம் பேசக் கருதினையேற்
றுமரை பெம்மூ ரகவித மெம்மையர் தையலிவன்
மாமணச் செந்தேன் வருநீகொண் டேகுதி வண்டெனவே. ()

வரையுநா ளுணர்த்தல்.

தானைக்கு முன்வந் திடுஞ்சூர பன்மனைச் சாடிவந்த
சேனைக் கடலை யழித்தோன் மயில்வரைத் தேரண்ணலே
வானத்தி னூர்கொண்ட வம்புலி பார்த்தனர் மாதர்மலர்
கானத்தி னூர்கொண்ட வம்புலி பார்த்தனர் கானவரே. (உ அ ௩)

அறிவறிவுறுத்தல்.

அழிக்கின்ற தானவன் மாயமஞ் சக்கை யயிலெறிந்தோன்
செழிக்கின்ற தோகைவெற் பான்றந்தை போலத் திருவண்ணலே
பழிக்கஞ்சி னுளோர் பதிவுசொன் னூலும் பகர்தல்விட்டுச்
சுழிக்கின்ற வாரி முழங்கா லளவென்று சொல்லினளே. ()

குறிபெயர்த்திடுதல்.

வேகித்த மானத் துடன்கோட்டை தூளிட்ட வீரன்பணி
மாகத் தவியன் முருகன் மயில்வரை மன்னவனே
சோகத்திலேவர வேண்டா மினியின்று தொட்டுயர்ந்த
நாகத்தின் வாய்வருந் தேவா முதம்பெற நாடுவையே. (உ அ ௫)

பகல்வருவானை யிரவுவருகென்றல்.

மையாரு மேனி பெறுபானு கோபனை மாய்த்தல்செய்த
செய்யான் பணிகுகன் றோகைவெற் பாபகற் சேரவெண்ணிற்
கையாரு மாலையிற் சேரா ததுமணங் காண்கிலது
மெய்யார் மனித மரத்திலுண் டாமலர் மேவிடுமே. (உ அ ௬)

இரவுவருவானைப் பகல்வருகென்றல்.

சொருபங்கொள் தெய்வப் படைசிங்க மாமுக சூரன்விட
வொருவுதல் செய்த குமரன் மயில்வெற்புக் கோர்பகலே
வருதனன் றுமந்த வானைன் மகள்சகி வந்திடினு
மிரவினுக் கஞ்சாத் துரைபெ யிராவர லெண்ணலையே. (உஅஎ)

பகலினு மிரவினும் பயின்று வருகென்றல்.

செல்லியல் சிங்கமு காகசு னுட்கொண்ட சேனைவரக்
கல்லிய வாளிபன் வேலன் மயில்வரைக் காவலவா
மல்லியல் கீர்த்தியும் புண்ணிய மும்பெற்ற மன்னவர்க
ளெல்லை யிகமார் கருநிற மாலை யிகழ்ந்திலரே. (உஅஅ)

பகலினு மிரவினு மகலிவ ணென்றல்

தோல்வி படாத வரிமுகன் ஞானத்திற் றேத்திரஞ்செய்
வேலன் முருகன் குகன்சேந்தன் வேண்மயில் வெற்பிறைவா
மாலைவந் தால்விழி நிலத்துக் காரம் வருசதிராங்
காலைவந் தானு முகமதி யாமனைக் கஞ்சத்துக்கே. (உஅகூ)

உரவோ னுடு முருங் குலனு,மரபும் புகழும் வாய்மையுங் கூறல்.

ஊருட னுடுங் குலமு மரபு முயர்புகழுஞ்
சீரொடு வாய்மையு நின்போ லுபர்வு செறிநெறியா
னேருறு வேலன் மயில்வெற்ப கூந்த லிவட்குரைத்தாற்
றூர்மலர்க் காடல்ல வோமணங் காணுந் தருணமிதே. (உகூ0)

ஆறுபார்த்துற்ற வச்சங் கூறல்.

வாரிச சந்திர ஞாயமிவ் வூர்க்குன் மலர்முகமே
யோர்பானு பங்கய ஞாயமெம் மைபர்க் குறுமனமே
சேர்வான மாறின் முருகன் மயில்வெற்பிற் சிருறுமோ
தாரா தரசா தகஞாய மங்கை தரணியிலே. (உகூக)

ஆற்றுத் தன்மை யாற்றக் கூறல்.

வல்லி யெழுதிய தாமரை யேயென்னும் வாரிசஞ்சே
ரல்லியை நீத்த மறவியென் றேவென்னு மாடும்பச்சைச்
செல்வ மயில்வரை வேளை நினையார் திறமெனவே
யெல்லியு நீங்கு மிவளுக்கொன் றூற்ற விசைத்தருளே. (உகூஉ)

காவன் மிக வுரைத்தல்.

நில்லெனச் சிங்க முகன்றலை பற்பல நீக்கினின்றோன்
கல்விவித் தான முருகன் மயில்வரைக் காவலவா
பல்வித மான களவோ விளங்கப் படுந்தவன்னை
சொல்விலங் கிட்டனள் கள்ளருக் குற்றூர் துணையில்லையே. ()

காமமிக வுரைத்தல்.

வீட்டிற் குழந்தை யிதழ்கடிக் குங்கிளி மேற்புகலுங்
காட்டு மரம்பை யணைத்துமுத் தாடிக் களிபருகு
நாட்டிற் சிறந்த முருகன் மயில்வெற் பினரியிச்சை
கோட்டிற் குருவித் தலைப்பனங் காயென்னிற் கூறலென்னே. ()

கனவுநலி புரைத்தல்.

விழிமீ திருந்து தனமீதி லாவர் விழிக்கினெஞ்சின்
வழியோ டுவர்பிரி யேனென்பர் வேலன் மயில்வரையார்
பழிபாகு மென்னும் பறித்தேகு மென்னும் படுமிரவின்
மொழியா லிரக்கும் விழியாள் விடிந்துமுன் மோகினியே. (உசரு)

கவினழி புரைத்தல்.

உண்ணுத செங்கனி பூதி செறிமணி யோடடுத்த
கண்ணுடி போல்வஞ்சி யாகின ளேயிரு கால்பணிந்து
விண்ணுடர் போற்று முருகன் மயில்வரை மேவினர்போ
லெண்ணுத தெண்ணிவண் சாதியி லேமுத் திணையுகுத்தே. ()

வரைவு கடாதல் முற்றிற்று.

---

## பதினேழாவது—ஒருவழித் தணத்தல்.

---

தன்பதிக் ககற்சி தலைவன் சாற்றல்.

பிஞ்சும்வன் காயுங் கனியும் விதையும் பெருத்தசொர்ன
வஞ்சிக் கொடிக்குத் துகிர்க்கொடி நீசொல் வரிக்கணையால்
விஞ்சு மரிமுகற் கொன்றேன் முருகன் விளங்குகின்ற
வஞ்செழுத் தாகிய வாறெழுத் தெய்திலுண் டாவதுவே. (உசஎ)

மேன்சொற் பாங்கி விலக்கல்.

ஆளி யுருவொடு போர்செய் மகாசுர னைவனைக்
காளியிற் போக்கிய சேந்தன் மயில்வரைக் காவலவா
நாளுமவ் வஞ்சி யிரண்டோ பழுதில்லை நாடிச்செல்வாய்
மீளுமுன் னஞ்சி யிரண்டு பழுதாய் விடுநிசமே. (உசஅ)

தலைவன், நீங்கல் வேண்டல்.

அகத்தினி லெண்ணி யசுரேசன றேரை யருகழைத்துச்
சுகச்சொரு பம்பெற நின்றேன் மயில்வெற்பிற் சொல்வதுகேள்
சகத்தின் மகத்திற் குறைபார்ப்ப துண்டெங்குஞ் சார்கிலனுன்
முகத்துக்குச் சென்று கனிவாய்க்கு மீள்குவன் மொய்குழலே. ()

பாங்கி விடுத்தல்.

பொருசூரா னுர்சர பப்பட்சி யாகப் பொன் மென்மயிலா
யொருமா மலையுகைத் தோன்மயில் வெற்பி னுறைபன்னலே
திருமானை நீத்தல்செய் மன்னருண் டோவிரைந் தேசென்றுநீ
குருவாரம் வந்து புகின்மந்த வாரங் குறிக்குவையே. (கூOO)

தலைவிக்கவன் செலவுணர்த்தல்.

பல்லா யிரமுருக் கொண்டெழுஞ் சூரனைப் பார்த்துநகைத்
தெல்லா மொடுக்கிய சாமி மயில்வெற்பி லேந்திழையே
மல்லார் மலைமர கோய்பின் னிடப்போய் வருதுமென்றூர்
கல்லார் சுரமென நீவாடச் செல்கின்ற காதலரே. (கூOக)

தலைவி, நெஞ்சோடு புலத்தல்.

மார்பினிற் றாமரை பூத்ததுங் கோங்குற்ற மாமரமும்
போருறு மாவி லசோக மலர்ந்ததும் பூகந்தென்னை
நேருறு சேந்தன் மயில்வெற்பர் கண்டிலர் நேர்ந்திலர்நம்
மூருறு வகைமறந் தாரு ருவகைகொண் டோடினரே (கூOஉ)

சென்றோ னீடலிற், காமமிக்க கழிபடர்கிளவி.

ஞானசொ ரூபம்வெஞ் சூரற்குக் காட்டியசு நான்மறைத்த
கோன்முரு கையன் மயில்வெற்பர் நீடினர் கூர்கடலே
கானன் மரக்கல மேவிழி நீருங் கலங்கலமே
தூநலச் சோலைக ளேபெழு திர்வரிஞ் சோலைகளே. (கூOங)

கோற்றொடிப் பாங்கி யாற்றுவித்தல்.

தூண்டிய தேரே றினர்மயில் வெற்பர் துரைமருது
பாண்டிய னுந்தேர் வடக்கொட் டனன்விருப் பாகுமுன்னை
வேண்டிய மன்னர் வருவார்வை யாபுரி மென்கரைமேற்
றீண்டு திருவர சேயிட மாவந் திருவரசே. (கூOச)

அவன், வந்தமை யுணர்த்தல்.

ஊர்கான் குரவையும் பேரியுங் கொம்பு மொலித்தவொலி
பார்மா வலவர்முன் னுனர் படகுடி பார்கொடிபார்
கார்மா நிகரு முனைப்பார் மயில்வெர்பிற் கந்தன்வருந்
தேர்கான வந்தனர் சீயலங் காரிபொற் சிந்துரமே. (கூOரு)

வந்தோன்றன்னெடு, நொந்து வினுதல்.

சொன்னுளுக் காரஞ்செய் தீரோ வெனவுரை தும்மல்செய்து
பின்னுள் வருமென் றதற்குக் கொடுமொழி பேசினள்பூம்
பொன்னுள் குகன்செய லாலிவண் வந்து புகுந்ததனு
லென்னுக்கு மூக்குங் கொடுத்தீர் மயில்வெற்பிறையவரே. (கூOசு)

## கஅ.—வரைவிடை வைத்துப் பொருள் வயிற் பிரிதல். சஎ

வேந்திறல்வேலோன், பாங்கியோடு நொந்து வினாதல்.

இருகலைத் தீக்கள் பெறும்போடு மத்தள மேய்ந்தவுன்னால்
வருத றவிர்தன் மரப்பதுண்டேபெ ன் மயில்வரைமேற் [டோ
றருவிப சொற்கொண் டிறைவியை யென்னவுஞ் சொன்னதுன்
முருகனை யென்னித் துயர்போக வென்று முருகனையே (கூ0எ)

பாங்கி, இறைவியை யாற்றுவித்திருந்த வருமை கூறல்.

பொன்வினை யாளர் மரவினை யாளர் புகனுமன்னின்
றன்வினை யாளர்பெண் ணூல்வினை யாளரைத் தாக்கல்செய்தென்
றென்விளை யாடு முருகன் மயில்வரைத் தேரன்னைலே
யென்வினை கூறுவ துன்வினை மேன்மன மெய்திடினே. (கூ0அ)

ஒருவழித்தணத்தல் முற்றிற்று.

---

## பதினேட்டாவது—வரைவிடை வைத்துப்பொருள் வயிற்பிரிதல்.

---

என்பொருட் பிரிவுணர்த் தேந்திழைக்கென்றல்.

அறநிலை யஃகின் மறநிலைச் செம்பொ னரசர்கொள்வார்
செறுநர் பொருடன மூன்று வகையினுஞ் சீரியதாங்
குறவர் மலைக்கொடி மேவிய வேண்மயிற் கோத்திரத்திற்
றிறமுற் றுரைத்தி மலையாள வீழுந் திறைகொள்வதே. (கூ0கூ)

நின்பொருட் பிரிவுரை நீயவட்கென்றல்.

கண்டிக்குப் போம்ப வழக்காட்டுக் கேகுங் கலிங்கத்துக்குத்
தொண்டிக்குப் போந்திர ளீழங்கை யடுங் தொடுத்தடிமைக்
கொண்டசு வாமி மயில்வரை யாளுக்குக் கூறிடினீ
ருண்டவ ளுண்டு விடைகொண்டு போகுவ தோர்குவனே (கூக0)

நீடேனென்றவ னீங்கல்.

மாதரை மேவினர் மிக்கான வீகையை வர்ச்சிப்பரோ
காதலிப் பார்க்குக்கல் யாண முயற்சி கடனல்லவோ
நீதனி யாற்றுதி வேண்மயில் வெற்பினி னீடநில்லேன்
மீதெழு கண்ணுக்குங் காதுக்குந் தூர மிகவில்லையே. (உகக)

பாங்கி, ஓடரிக்கண்ணிக் கவன்செலவுணர்த்தல்.

அண்டமும் பாரு நிறைந்த வசுரர்க்குங் காரஞ்செய்தோன்
றண்டமிழ் வாழ்மயில் வெற்பாருஞ் சோலைத் தனிக்குயிலே
கொண்டிடு மாசைபற் றுதென்று மேலுங் கொளப்புகுந்தார்
திண்டிறன் மன்ன ருனையே யிருத்திய சிந்தைகொண்டே. ()

பூங்குழையிரங்கல்.

பூங்குழை மாவென நின்றனை வேலிற் பொருதவன்பூந்
தேங்கமழ் சோலை மயூர கிரிக்குறை செல்வரவர்
தாங்கட மேவி யெனது பசுவைத் தனிபுரக்க
வேங்கையைத் தேடின ராமறிந் தார்க்கு வியப்பிதுவே (கூகக)

பாங்கி கொடுஞ்சொற் சொல்லல்.

மாவை யிரண்டிட்டுச் சேவலுந் தோகை மயிலுமெனப்
பூவி லமைந்த முருகன் மயூரப் பொருப்பனைங்கே
பாவையர்க் கிப்படி யுண்டோ மயில்பழி பார்த்திலையே
யாவியுங் கூடுமொன் றாக்கில னேமுன் னயனுமக்கே. (கூகச)

தலைவி கொடுஞ் சொற் சொல்லல்.

பொன்வாசஞ் செய்யு முருகன் மயில்வரைப் பூங்கிளியின்
றன்வா சகமுஞ் சகிவா சகமுஞ் சரிசொல்லலா
மின்வாசஞ் செய்யு மயில்காட்டி யெம்மை விருதளித்த
மன்வா சகமு மரிச்சந்த்ரன் சொல்லு மதிக்கிலொன்றே. (கூகரு)

வருதுவர் மீண்டெனப் பாங்கிவலித்தல்.

கானே யிருவர்நும் போற்கண் டனராங் கடிதுறுவார்
மீனே கமந்த வரைமீட்ட வேண்மயில் வெற்பினில்வாழ்
மானேயுன் கண்வைத்த காலே நடந்தது வந்திடுநங்
கோனேது சென்றது நானே துரைத்தது கோபமென்னே. (கூகசு)

பருவங்கண்டு பெருமகள்புலம்பல்.

எறிய மேகஞ் சரிபவில் வீசமி னெற்றெடுங்க
வேறிய லானை பிடியோ டெதிரமென் காந்தண்மின்னத்
தூறலு மேவ விருமலர்க் கண்ணீர் சொரியச் செவ்வேள்
கூறு மயில்வரைக் கார்கால மியானெனக் கூடியதே. (கூகஎ)

இதுவென வம்பென்றல்.

கூந்தலைக் கண்டு மயினட மாடின கொண்டவல்குற்
பாந்தளைக் கண்டு செங் காந்தளிற் பாந்தள் படமெடுத்த
வேந்திய மின்னு மிடைச்சோதி வேண்மயி லேய்ந்தவெற்பிற்
சாந்த முலைபல்ல வோவிளை யாடுதந் தாவளமே. (கூகஅ)

இறைமகண்மறுத்தல்.

வானி லிடித்தொனி கூறினும் பேரிகை வாத்யமென்பாய்
ஞான முதற்பொரு ளாகிய வேண்மயி லுகத்தின்வாய்க்
கான்வரு வார்செங்கைக் காந்தளின் மல்லிகைக் கண்ணியைப்பா
ரானைபைக் குத்திச்சொல் லான்மறைத் தானிக ரன்றுனக்கே. ()

## ௧௮.—வரைவிடை வைத்துப் பொருள்  வயிற் பிரிதல்.

அவர்தூ தாகிவந்தடைந்ததிப்பொழுதெனத், துணைவிசாற்றல்.

ஓது முருகன்கை வேலெனை மின்னி யுவன்மயில்போன்
மீது பசந்து கொடிச்சிறை போலிடி விட்டுமுகி
றாதொரு பத்திலொன் றுனதி னால்வந்து தோன்றியதா
னூத னருள்போற் குளிர்ந்துவின் னூர்மயி னாகத்திலே. (௩௨௦)

பிணைவிழியாற்றல்.

பாலெனத் தேனெனக் கண்டென்ன வார்த்தை பகரிருவர்
வேலன்ன கண்ணுக் கினியசெவ் வேண்மயில் வெற்பிடத்தே
கோலன்ன வேந்தர் வரல்சொல்லிக் காக்குங் குணத்தினன்றோ
மாலென்ன வுன்னை வருத்தான் கொடிய மலரயனே. (௩௨௧)

அவனவட்புலம்பல்.

தேனூறு பாயுங்குன் றக்குடி மாதுக்குச் சேந்தன்செங்கை
வேனாடுங் கண்முத்த நீலமுத் தாகக்கொள் வெண்முத்தெல்லாங்
கானார் வெடிமுத்த மாக நுதன்முத்தங் கன்னத்தின்வா
யானாத செம்முத்த மாகநன் றூப்பொரு ளாக்கினமே. (௩௨௨)

அவன்வருகாலைப், பாகன்றன்னொடு சொல்லல்.

ஆடுங் கொடிநெடுந் தேர்வல வாவன்ப ரன்பரென்றே
தேடுங் கொடிகையிற் கற்சுமந் தேபழி செய்தனம்யாம்
வாடுங் கொடிக்குவெந் நீர்விடல் போல்வேண் மயில்வரைமேற்
கூடுங் கொடிபவென் னெஞ்சுமுன் பாய்ச்சற் குதிரையுமே. (௩௨௩)

மேகந் தன்னொடு சொல்லல்.

வாரா திருந்தவன் மேலன்பென் னேவென்று மாற்றுதற்கோ
பாரா திரார்வந் தனரென்ன வின்சொற் பகருதற்கோ
வேரா ரொருவரை நீத்துச்செல் பாவி யெனைநிகராய்த்
தாரா தரமே முருகன் மயில்வரை சார்கின்றதே. (௩௨௪)

பாங்கி, வலம்புரி கேட்டவன் வரவறி வுறுத்தல்.

கார்முடி யாய்வெளி யேபயி லாயிரு கண்விழிபாய்
வார்புனை யாயணி தானணி யாயிவை மாற்றினதா
லூர்திகழ் வேண்மயில் வெற்பி லரகர் வோசையென்ன
வீரியர் வந்தன ரென்றேமுழங்கிய வெண்சங்கமே. (௩௨௫)

வலம்புரி கிழத்தி வாழ்த்தல்.

வலையிட்டும் பின்னொரு வீட்டி லடைத்துங்கைவாளுருவிக்[பால்
கொலையிட்டுங் கண்டதுண் டஞ்செய்தும்வேண்மயிற் குன்றத்தர்
விலையிட்டு மென்மையர் மென்மைய ரேசங்க மேயுங்கள்பேர்
தலையிட்டுங் காலிட்டுங் கல்யாணத் துஞ்சொல்லத் தக்கதுவே. ()

வந்துழி, நினைத்தமை வினவல்.

உங்களை விட்டுப் பிரியா திருந்திடு மொண்டொடிக்கு
மங்கலங் காட்டத் திருப்பூ வணம்வந்த மார்க்கநன்றுஞ்
செங்கைகொள் வேலன் மயில்வெற்பிற் சிந்தனை செய்ததுண்டோ
வெங்களை விட்டுப் பொருள் வேறு தேடு மிறையவரே. (ருஉ௭)

நினைத்தமை செப்பல்.

குளங்கண்ட போதும் வயல்கண்டபோதுமுன் கூட்டுன்வண்டின்
வளங்கண்ட போதுங் குயில்கூவும் போது மழைசெறிகார்த்
தளங்கண்ட போது மயில்வெற்பி னிட்கள சாமிமெய்ச்ச
களங்கண்ட போது நினைத்தமை பாகனுங் கண்டனனே. (ருஉ௮)

அனத்தகை யவனை யாற்றுவித் திருந்தமை, பாங்கிகூறல்.

தாக்கா நிதிசெய்யச் சென்றமன் னுவமை தன்புதல்வன்
மாக்கார் மயூர கிரிமான் வருத்தத்தை மாற்றியது
நீக்கா முகிலும் படமுந்தன் காலுஞ்செஞ் சேல்விழியுங்
காக்காய் கனுவெறும் பொய்தானு நானுமுன் கைகளுமே. ()

வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் முற்றிற்று.

---

## பத்தோன்பதாவது—வரைவு மலிவு.

---

காதலன் முலைவிலை விடுத்தமை பாங்கி, காதலிக்குணர்த்தல்.

திரைக்கடலேயென்ப தாயிரம் யோசனை சேர்ந்த வொன்னார்
புரத்திடை வாவென்ற சிங்கார வேலன் புரக்குமயில்
வரைக்குயி லேகிளி யேமன் னவருன் மணங்கருதி
யரைப்பணங் கொள்ளப்பொன் னுயிரங் கோடி யனுப்பினரே. ()

காதலி நற்று, யுள்ள மகிழ்ச்சியுள்ளல்.

கண்டன்னை நெஞ்சங் களிகூருஞ் சிற்றன்னை கண்டனளேல்
விண்டிட நெஞ்சங் குறியா ளிதுநிசம் வீணல்லவே
திண்டிறல் வேலன் பசிய மயூரச் சிலம்பிடத்தே
வண்டென்ன வென்றன் மணந்தேடி மன்னவர் வந்திடினே. ()

பாங்கி, தமர்வரை வேதிர்ந்தமை தலைவிக்குணர்த்தல்.

காதலர் வந்தனர் நீயெதிர்ந் தாலென்னக் காருண்யராஞ்
சோதி முருகன் குகன்சேர்ந்தன் றேகைச் சுரும்பிடத்தே
மாதக்கந் தேர்பொற் குடங்கயல் பூங்க வரியொடுமுன்
றுதை யெதிர்ந்தனர் கேண்மேளத் தோடுகைத் தாளங்களே. ()

அவளுவகையாற்று துளத்தோடு கிளத்தல்.

ஆட்டுக்கு வந்த விபத்தும் வராத தறிந்துமுனைக்
கோட்டுக்கு வந்த விறுமாப்பு மாடவர் கூறுங்கல்விப்
பாட்டுக்கு ளான பயனுநெஞ் சேவிடப் பார்த்திபர்கைத்
தேட்டுக் களிற்றியம் வேண்மயில் வெற்பைத் திடுக்கிட்டதே. ()

தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.

தாமரை மேற்பனை காய்த்தது நின்மேற் றனயபிலள்போற்
பூமின் முடித்தலை சாய்த்ததும் வேண்மயிற் பொன்வரைநீ
காமனு மாசி லிரதியும் போலக் கலந்ததுவு
நாமறிந் தோமன்னை லேயது வோவின்னு நண்ணுவதே. (ருருச)

தலைவி, மணம்பொருட் டாக வணங்கைப் பராநிலை; காட்டல்.

திருமான் மருகன் பரங்குன்றின் வாய்த்தெய்வ யானைதனக்
கோருமாலை யிட்டவன் றோகை மயில்வெற் புறையண்ணலே
வருமாலை யந்தொழு மங்கையைப் பார்மறை மண்டலத்தே
யிருபூ வெழும்பி யொருபூ வரும்பா யிருந்ததுவே. (ருருரு)

கண்டோன் மகிழ்தல்.

மன்னன் முசுகுந்தன் சீர்கொண்டு போற்ற மனமகிழ்வோன்
பன்னுந் தமிழ்செறி தோகை மலையினிற் பார்மனமே
மின்னும் புயனு மதியமும் பூவில் விளக்கிமல
ரன்னங் கடவுளை நம்மால் வணங்கு மருமைபையே. (ருருசு)

வரைவுமலிவு முற்றிற்று.

---

இருபதாவது—அறத்தொடு நிற்றல்.

---

கையறு தோழி கண்ணீர் துடைத்தல்.

இந்திர னூர்குடி யேற்றிக் கயிலைக் கெழுந்தருளி
வந்தவர் தோகை மலைச்சாரற் போந்த மயிலிபலே
சந்திர காந்தக்கற் சாணையிற் றண்ணீர் தருதலென்னே
யந்தியில் லாத பகலே மதியெங் கமர்ந்ததுவே. (ருருஎ)

கலுழ்தற் காரணங்கூறல்.

வாளுக்கு வின்மையை வைத்தா ருறவை மனத்தெண்ணியோ
நீளத் துயில்புரி யாத வெறுப்பை நினைந்துகொண்டோ
வேளுக்குப் பேரழ கிந்தருள் வேண்மயில் வெற்பிடத்திந்
நாளிற்பற் றுள்ளவர் போலே கலுழு நயனங்களே. (ருருஅ)

தலைவன், றெய்வங்காட்டித்தெளிப்பத்தெளிந்தமை,யெய்தக்கூறல்.

கண்ணனை தாமரை வேலவன் மேற்செலக் காட்டியுயர்
விண்மீ திருதா மரைமலர் நீட்டி விரைந்தினிமேற்
பெண்ணை பிரியிற் பிரிந்தே விசமென்று பேசினர்மற்
றெண்ணோர் தவறு மயில்வரை மீதி லிருந்தவரே. (௩௩௯)

இகந்தமை யியம்பல்.

அண்டர் பணிகும்ப மாமுனிக் கேதமி ழானவெல்லாம்
விண்ட குமரன் கடம்பன் மயில்வரை மேவுகொடைக்
கொண்டலன் னார்கனி வாய்ப்பா லமுதங் குலாவிப்பன்னா
ளுண்டவர் விட்டுக் கிரண்டகஞ் செய்தா லுரைப்பதென்னே. ()

(பாங்கிஇறைவனை) இயற்பழித் துரைத்தல்.

பார்மே லிறைவர்சொற் கன்மே லெழுத்தென்பர் பார்க்கிலது
நீர்மே லெழுத்தென வாயிற்றன் றேயிவர் நேர்நனவு
கார்மேல் விளங்கு முருகன் மயில்வெற்பிற் கந்தருவ
ரூர்மேன்மை யானது நீயன்ப ரென்பதென் னேவியமே. (௩௪௧)

(தலைவி) இயற்பட மொழிதல்.

முயக்கிடை யேவெளி காண வயர்ந்தது முன்னொருநாட்
கயக்கிடைச் சொற்றதும் வேண்மயில் வெற்பர் கருதலர்மேல்
வயக்கிடைச் செல்பவ ராரென்ற போது வருந்துயரு
மயர்த்திருப் பாரல்லர் தப்பாது மார்க்க மதிர்கடலே. (௩௪௨)

தெய்வம் பொறைகொளச் செல்குவ மென்றல்.

முருகா வுன்முன் சொன்ன வார்த்தைவிண் டாரென் றமுத்தவெற்பி
லிருகாந்த ளேற்றிய துண்டே பொறுத்தரு ளென்றுசொல்லக்
குருகார் சரவணப் பொய்கையின் மூழ்கிக்குன் றக்குடிக்கே
திருகா மனச்சகி யேவிரை வாயின்று செல்குவமே. (௩௪௩)

இல்வயிற் செறித்தமை சொல்லல்.

காட்டின் மறித்துப்பொய்பா மொழிகூறுங் கவிதைகொண்டோன்
வீட்டினி லாறு படைவிட்டி னன்மயில் வெற்பனையாய்
சூட்டிய மாலையுந் தோண்மாலை யுஞ்சொல்லுஞ் சோலையுநின்
மூட்டிய மாலையுங் கண்டன்னை யிற்செறிப் பாக்கினளே. (௩௪௪)

சேவிலி, கனையிரு ளவன்வரக் கண்டமைகூறல்.

கத்தூரி மிஞ்சிய நீற்றிலை சேர்பழுக் காய்ச்சுருட்டு
வைத்தாய் மலர்மெத்தை மீதுகொண் டன்னை மனத்தயிர்த்தா
ளெத்தா மெனவெண்ணி வேண்மயில் வெற்பி லிரவினின்று
முத்தா ரமும்வெற் றிலைச்சிட்டுங் கண்டு முனிந்தனளே. (௩௪௫)

எறிவளை வேற்றுமைக் கேது வினாதல்.

செய்யவன் வேலன் மயில்வெற்பின் மன்னர் சிறுமிக்கின்றே
மெய்யுறு வேதனை நேரென்னி லன்னம் விருப்பமில்லைக்
கையில் வளையில்லை பாலென் றெவருங் கருதினரே
யையமுண் டாய தவள்பாங்கி யாமென் னருண்மகளே. (௩௪௬)

வெறி விலக்கல்.

சோக முறுத்தென் கிழக்குறு தேவின் றுயர்குறியாய்
வாகன மான கடாய்க் கின மென்ன மனத்தெண்ணிலாய்
கூறுவென் மூர்த்தனை குன்றக் குடியிற் குமரவெங்கள்
நாகிள மானுன்னை நம்பின பாவநன் றாகியதே. (௩௪௭)

வெறி விலக்கியவழி வினாதல்.

நாருகன் பாசு பதத்தைக்கை யேந்திய சாமியையம்
போருக னைப் புகன்றானை நானைப் புகல்வதென்னே
யோரு மயில்வரை மேலுள்ள வார்த்தை யுரைபெறுசூல்
வாரங்கொ ளன்னைக் குரையா தொளித்தன் மரபல்லவே. (௩௪௮)

பூ, ஏதுவாகத் தலைப்பாடியம்பல்.

பெரும்பூத மைந்த னுருவான சூரைப் பிளந்தடியார்
தரும்பூசை பெற்றவன் மாயூர வெற்பிற்றை யற்களியே
பொருந்தானைப் பைங்குழல் பற்றி யிழுத்துப் புகமுடித்து
வருந்தா வுரைசொற் றிருந்தா ரொருவர் மனமகிழ்ந்தே. (௩௪௯)

புனல், ஏதுவாகத் தலைப்பாடியம்பல்.

முன்பகை யாக வரிபட்ட பூக்கண் முகிழ்நகையைத்
தன்பகை தீர்க்கவம் பிற்கொல்லு நாளித் தரணியிலோர்
மின்பதி வேலவர் கையிற் குழல்கொண்டு வேட்டெழுப்பி
புன்புதல் விக்குயிர் தந்தார்செவ் வேண்மயிலோங்கலினே. (௩௫௦)

களிறு, ஏதுவாகத் தலைப்பாடியம்பல்.

கண்ணுக் கழுதெனும் வேண்மயில் வெற்பிலொர் காவலர்நம்
பெண்ணிற் கருப்போர் மதயானை வாய்ப்படப் பின்னளித்தார்
விண்ணி லெழும்புங் கலைகள்பின் போயது வெய்யபணி
நண்ணுமவ் வேளை கரிமலை வச்சிர நாந்தகமே. (௩௫௧)

மின்னிடை வேற்றுமை கண்டுதோய் வினாதல்.

அரவிற்சங் காமலை மேற்றோன் றியபிறை யாய்ந்திலைசெப்
கரவிற்சங் கோதையுங் காண்கிலை சோர்துகில் காண்கிலைகோன்
வரவிற்சங் கோதை மகிழ்வதுஞ் செவ்வேண் மயில்வரைமே
லிரவிற்சங் கோதை குறிப்பதும் பாரா திருந்தனையே. (௩௫௨)

### சேவிலி, முன்னிலை மொழியால் மொழிதல்.

அன்னாத பாங்கி மதியுடன் பாட்டிலொ ராண்சிங்கநம்
பெண்ணானை மத்தகஞ் செங்கை நகத்தாற் பிளந்ததுண்டாங்
கன்னான தெய்வ முருகன் மயில்வரைக் காரிகையே
யுன்னா துறங்கா தெதிர்சிங்க நோக்கநெஞ் சோர்கின்றதே. ()

அறத்தோடு நிற்றல் முற்றிற்று.

---

## இருபத்தோன்றாவது—உடன் போக்கு.

---

### பாங்கி தலைவற் குடன்போக் குணர்த்தல்.

அஞ்சப் படையஞ் சனுப்பிவெஞ் சூர னணியைவென்றோன்
மஞ்சிற் பொலியு மயில்வரை காக்கின்ற மன்னவரே
செஞ்சொற் கிளியையுன் பூங்கா வனத்திற் செறித்தனன்றாங்
கொஞ்சத் தனத்துக்குக் கொஞ்சத் தனத்தைக் கொடாரெமரே.

### ஆங்கவன் மறுத்தல்.

இரண்டு தனக்குட மீய மனுட ரிருக்கவுநீ
முரண்பட வார்த்தை மொழிந்தனை நிற்க முதிபவிண்ணோர்
சரண்புகுஞ் சாமி மயில்வெற்பிற் றமைர பூத்திடுமோ
வரண்புரம் போகுமுன் மாந்தளிர் மேன்முத் தரும்பிடுமே. ()

### அவளுடன் படுத்தல்.

இனத்திற் செறிந்த விவள்புத்தி சாலியென் றின்னுமெண்ணிர்
கனத்திற் பொலிந்த முருகன் மயில்வரைக் காவலரே
யனத்திற் செறிநடை யார்நல்ல கான மகல்வதுண்டோ
வனத்திற் படாததுண் டோதா மரைநும் மகிழ்ச்சியுண்டே. ()

### தலைவன் போக்குடன் படுதல்.

கல்லுஞ் சரிமல ருஞ்சரி வேண்மயிற் கார்வரைமேற்
புல்லுமுள் ளுஞ்சரி சேர்ந்தேகி லென்றா புகன்றதுண்டே
பொல்குங் கிளிக்குத் திசைகாமை காட்டியவ் வோர்புறத்தே
நெல்லுங் கனியுந் தெரித்தமு தூட்டிநின் றேகுவனே. (௬௫௭)

### பாங்கி, தலைவிக்குடன்போக்குணர்த்தல்.

தனத்திற் சிறந்தவர் கைபாலை யாழிற் றடவந்ததா
ஓனக்கவ ரென்றும் பிரியா திருப்ப துசிதமன்றோ
வனத்திற் குமரிக்கு வேண்டுதல் செய்ய மயில்வரைவேள்
புனத்திற் குமரி வரவேண்டு மென்றும் புகன்றனரே. (௬௫௮)

தலைவி, நாணழி விரங்கல்.

தென்னுவென் றின்னிசை வண்டினம் பாடுஞ்செழும்பொழில்சூழ்
பன்னுடைர் போற்று முருகேசன் றேகைப் பருப்பதத்தே
தன்னுணை தேசமெக் குஞ்செலப் போக்கித் தபையின்றியே
யென்னுணை மாற்ற நினைத்தனன் றேநம் மிறையவரே. (௯௫௧)

கற்பு மேம்பாடு, பூண்முலைப்பாங்கி புகறல்.

இற்படு வாழ்க்கையர் போலிரு மாத ரிடத்தர்மயில்
வெற்பிற் சுனைக்க ணெடுத்தவ ரார்கரி வென்றவரார்
கற்பது வேதலைக் கொள்வார் மனத்தைக் கருதியபேர்
பொற்பறு நாண்டலைக் கொண்டா லென் னுவது பூங்கொடியே. ()

தலைவி, யொருப்பட்டெழுதல்.

ஊரிருந் தாலென் னுறவிருந் தாலென் னுவந்தபெய
ராரிருந் தாலென் களிற்றைப் பிடிநீத் தமர்வதுண்டோ
பாரிருந் தாளுங் குமரன் மயில்வரைப் பாங்கிமின்னே
காரிருந் நாலல்ல வோமயி லாடல் கருதுவதே. (௯௬௧)

விருப்புடைப்பாங்கி, சுரத்தியல் புரைத்தல்.

மன்னர்பி னப்படிச் செய்வது வேகற்பின் மங்கையர்க்கு
நன்னய மாவது சேர்தன் குகன்மயி னுகமின்னே
யுன்னுசெம் பாப்பு கரும்பாம் பதாங்கரி யுங்கரியாம்
பன்னு தழலிற் குழையுங் குழையும்வெம்பாலையுண்டே. (௯௬௨)

(தலைவி) சொல்லல்.

ஆண்டவன் சோலை மலைதிரு வேரக மார்பழனி
வேண்டு பரங்கிரி செந்தூரன் வேண்மயில் வெற்பகத்தே
யீண்டிவர் வீட்டின் மனைமில்லைக் கோவில்லை யின்பமில்லை
நாண்டரு கில்லா வலரில்லைக் காட்டிலிந் நானுமுண்டே. (௯௬௩)

பாங்கி, கையடை கொடுத்தல்.

பொருகும்ப ராசி யொருசிங்க ராசியிற் போயிடினுஞ்
சுரநின்ற கூந்தல் விடைராசி யின்பெயர் சாரினும
கரமீனங் கொள்ள விடாமலிக் கன்னியைக் காத்துநன்கு
யிருகற் கடகக்கை யாம்வேண்மயில்வெற் பிறையவனே. (௯௬௪)

வைகிருள் விடுத்தல்.

காமத்தி லாடிய தேவர்மெய்ம் மாலை கலிக்கவட
லீமத்தி லாடி மகன்றேகை வெற்பி லிறையவரே
சேமத்தி லாக மனமிருந் தாலித் தெரிவைக்குநீர்
சாமத்தின் மாலையைச் சூட்டிப்பொன் வைகறை தான்செல்லுமே.

### அவன்சுரத் துய்த்தல்.

மாலி லரவம் புரியார் விடையில் வருபவர்பொன்
மேலி லரவம் புரிவார் மகன்மயில் வெற்பனையாய்
பாலி லரவம் புலியுண்டு பாம்புண்டு பையகட
காலி லரவமின் னூரி லரவத்தைக் காட்டிடுமே. (௩௬௬)

### அசைவறிந் திருத்தல்.

நேத்திர மூன்றுடை யான்மக னென்றுனி னேவில்வந்து
பாத்திர மாக்கொண்ட வேண்மயில் வெற்புறை பைங்கொடியே
காத்திரந் தேற விரைந்துநன் னீரிற் கலந்துரைத்தோர்
யாத்திரை செல்லிற் சுரமாறும் பின்னை வழிநலமே. (௩௬௭)

### உவந்தலர்சூட்டி யுண்மகிழ்ந்துரைத்தல்.

பணைமுடி யாரன் பணைமுடி யார்வன் பணைமுடிப்பார்
துணைமுடிப் பார்தருஞ் செவ்வேண்மயில்வெற்பிற் கொம்பரன்னீர்
கணைமுடை யாரென நின்றேமிக் காட்டினிற் காரிகையும்
மணைமுடி யார்கத் திகைகொள்ள வந்த மகிழ்ச்சிநன்றே. (௩௬௮)

### கண்டோரயிர்த்தல்.

பண்ணா யிரங்கொண்டு தும்புரு நாரதர் பாடவிரு
பெண்ணார் விரும்ப வெழுந்தருள் காட்சிப் பெருமையுள்ளான்
றண்ணார் மயில்வெற்பி லிந்த்ராணி யென்னிற்கண் டானிமைக்குங்
கண்ணா யிரமில்லைத் தேவேந்த்ர னென்னக் கருதிவற்கே (௩௬௯)

### காதலின் விலக்கல்.

ஆறே பெரிதா றலைப்போர் கொடிய ரலைகடல்போ
லூறே வளவின் றனிச்சம்பொ ருதுள்ளங் காணாவட்கு
விறேது மாயை மகனேவென் றேன்மயில் வெற்பன்னலே
பேறேதெம் மூரலர் மாளிகை வைகுந்தம் பின்செல்கவே. (௩௭௦)

### தன்பதியணிமை சாற்றல்.

பகர்தேவி பட்டணம் விட்டுவந் தாற்றிருப் பாலைக்குடி
மிகுசேது பார்க்கமென் றெண்ணலல் லாலெண்ணம் வேறுமுண் டோ
புகவே சிறுவயல் விட்டாற் பெருவயல் பூம்பொழில்கண்
மிகவே தெரியுங்குன் றக்குடிக் கோவிலும் வேலையுமே. (௩௭௧)

### தலைவன், தன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தல்.

அன்னை யெனும்பிணி யில்லாத காட்டி லருங்கிளியே
யுன்னிகர் கின்ற சரவணப் பொய்கை யுதிசுவர்க்கந்
தன்னிகர் கின்றசெவ் வேண்மயில் வெற்பிது தன்களப
மின்னிகர் பொன்னுலகைவெள்ளி யாக்கிய வீடிதுவே. (௩௭௨)

உடன்போக்கு முற்றிற்று.

——o——

## இருபத்திரண்டாவது—கற்பொடுபுணர்ந்த களவை.

### பாங்கியை வினவல்.

பங்தெடுத் தாய்பேருயிர்ப்பெடுத் தாயோர் பயிலெடுத்தாய்
கொங்தெடுத் தாயங்கு மிங்குஞ்சென் றுய்பவங் கொள்கடலில்
வந்தெடுத் தாண்டவன் சேந்தன் மயில்வரைக் குன்கிளிதான்
சிந்தெடுத் தேசெல்லுங் கோவை யுறுமெனிற் செப்பினியே. ()

### பாங்கி செவிலிக் குணர்த்தல்.

நன்றே தருமிந்த மாலையென் றுடதர நான்புகுந்தே
னன்றே பழைய வரைநினைந் தோவெனை யன்பிகந்தோ
சென்று டிரும்பினன் காணேன் முருகன் செயலிதென்றே
நின்றேன் மயில்வரைக் கூகை யிரட்டு நெடுஞ்சுரமே. (௩௭௪)

### இனைய லென்போர்க் கெதிரழிந்து மொழிதல்.

சொல்விலங் கிட்டதல் லானுன் வளர்த்த துரைப்பிடிக்கு
வல்விலங் கொன்றுசம் பாதிக்கி லோம்விரை வாய்ப்புகுந்தாள்
புல்ல விளையும் பயிர்க்கிந்தப் போக்கு முளைத்ததென்றுற்
செல்வஞ் செறிகின்ற குன்றக் குடியான் செயலிதுவே. (௩௭௫)

### தன்னறி வின்மை தன்னைநொந் துரைத்தல்.

இரவு தவிர்ப்பது நன்றேயென் றுளிந்த வேந்தலிற்போய்
வரவிளை யாட வருள்செயென் றுள்வேண் மயில்வரையார்
கரவி லொடுங்கவர் கள்ளரென் றுள்சொற் கருதிலன்யா
னுரமதிற் சாய்ந்தினிப் பாலை யுதவென்று மோதினளே. (௩௭௯)

### தெய்வம் வாழ்த்தல்.

பகரத்தி லேவ லடியென்றல் பண்ணை பகரும்விதை
மகிழ்கின்ற தாய்போல் வருமாறு செய்வி மயூரகிரி
முகிழ்நகை வள்ளி கணவர் தலைவரை முன்னிமணந்
தொகுமலர் மாலை யிருகோங் கலர்த்திய தோகையையே. (௩௭௭)

### செவிலியறத்தோடு நிற்றல்.

பிடியானைக் கொம்பொரு நான்குபின் பாகிடப் பின்றொடர்ந்த
துடியானைக் கொம்புமுன் னான்கினின் றுனைத் துறந்துநமர்
படிமீது வேற்று மணநினைந் தானம்மிற் பற்றுமுண்டோ
வடியாரை வாழ்விக்கும் வேண்மயில் வெற்பினம் மாயிழைக்கே. ()

### பாங்கி தன்னுடு புலம்பல்.

ஆரப் பொருந்திய துன்றுய்க் குறைத்தனை யன்றெனக்கே
சேரச்சொற் றுயில்லை வேலன் மயூரச் சிலம்பிலெம்மை
யூரிற் பகைத்துடி பார்க்கவைத் தாயுன் னுறவினளைப்
பாரிற் பகைத்துடி பார்க்கவிட் டாயென்ன பாவமிதே. (௩௭௯)

### பாங்கியர் தம்மோடு புலம்பல்.

தேவையை மேற்கொண் டெழுந்தாலும் போம்பொருள் சேர்த
பாவைய ரேவேண் மயில்வெற்பி னென்ன பகர்வதியா[னுண்டோ
னேவு நிகர்கண்ணி யைநோக்கி நீங்க ளிரங்கலென்னே
கோவை விரும்பிப்பின் பாலை யிகழ்தல் குணமல்லவே. (௩அ0)

### அயலார் தம்மோடு புலம்பல்.

இரவே யிருபூ மலர மதியை யெமக்கொளித்து
வரவே புரியும்வெய் யோனை யழைத்து மதிகொடுத்து
விரைவாய் நடந்தனள் வேலன் மயில்வரை மெல்லியலீ
ரரவே யிழந்த மணிபோல வாடி யயர்ந்தனமே. (௩அக)

### பயிலிடந் தம்மோடு புலம்பல்.

மாவே வடுக்கொள் பலாவே கனிகனி வண்டன்முல்லைக்
காவேகண் ணீர்சொரி யாறே யிரைசுனை கான்றமனைப்
பூவே தலைகவிழ் மென்கொடி யேவனம் போய்நடுங்கு
தேவே யுறைமயில் வெற்பாளை யானெனத் தேடிக்கொண்டே. ()

### நிமித்தம் போற்றல்.

ஒருங்கடி சிற்குவை தானஞ்செய் வாரொரு கோடிசுற்றப்
பெருங்கடி போனு முருகன் மயூரப் பிறங்கலிலே
யருங்கடி யாமென்றன் காவலை நீத்தா ளணையச்செய்தாற்
கருங்கொடியேவரும்பொன்கொடி யாற்றின்னுங்காய்க்கொடியே.

### சுரந்தணி வித்தல்.

நேசித்த பாதையி ராமீ சுரவழி நேரும்வல்லோர்
யோசித்த பாம்பனந் தங்கான லாம்வே யுகுத்தமுத்த
மாசித்த பூமகள் கொப்புள மாங்கதி ராந்தெய்வநீர்
பூசித்த வேண்மயில் வெற்பாரைக் காப்பது புண்ணியமே. (௩அச)

### தன்மகள் மென்மைத் தன்மைக் கிரங்கல்.

பன்னீரில் லாச்சத் தனம்பார்க்கில் வெப்பாம் பதயுகள
மென்னுனைவொர் நாளனத் தூவி யெனச்சிவப் பெய்தியவா
னன்னீர்கொள் வேண்மயில் வெற்பிற்சுனைமொண் டநல்லதண்ணீர்
வெந்நீரென் பாட்டுக் குளிர்நீர்மை யானதென் வெஞ்சுரமே. ()

### இளமைத் தன்மைக் குளமெலிந் திரங்கல்.

வேங்கைத் துறுகற் புலிப்பற ழென்று வெருவியையர்
பாங்கர்வந் நீட்டி கொடுக்கு மிளமைப் பருவத்தின
டேங்கிருள் யாமத்து வேண்மயில் வெற்பைத் துருவினளாங்
கோங்கரும் பாது தளவும்வி ளாது குறுமுகையே. (௩அ௬)

அச்சத் தன்மைக் கச்சமுற் றிரங்கல்.

பங்காளும் வள்ளியென் ருய்தேவ குஞ்சரி பால்விருப்பார்
மங்காத வாசக் கடம்பார் மயூர வரையினிலே
சங்கித மேளந் தணுரென்ற போதுள்ளந் தானஞ்சுவாள்
வெங்கா ருடலத்த நாகங்க ளோசிக்கின் மெய்ந்நடுக்கே. (ரு.அஎ)

கண்டோ ரிரக்கம்.

தாகத்தி ஞற்சென் று பாங்கிய ராற்றிற் றலைப்படச்சூழ்
போகத்தி ஞர்சொல் லிடியே முழங்கப் பொருதநற்று
யாகத்தின் கன்மழை சோனைய தாக வகலுங்கொல்லோ
மேகத்தின்பான்மின் னுப்போலச்செவ்வேண்மயில்வெற்பிடத்தே.

ஆற்ருத் தாயைத் தேற்றல்.

வானத்திற் செல்வன் பரவையி ஞடி வருவனிந்தக்
கானத்தை வெற்பைத் துருவில னேபண்டு காதிற்பட்டி
நான்வைத்த வேரை யிவர்மாறி வைக்கினுந் தான்கொணர்வன்
ஞானக் குமரன் மயில்வரை வேந்த னளனல்லவே. (ரு.அகூ)

ஆற்றிடை, முக்கோற் பகவரை வினுதல்.

படையவர் முன்செல்லப் பின்படைந் தாளொரு பாவைமயி
லுடையவர் வேண்மயில் வெற்பகல் வாரினுண் டோகண்டது
நடையவ ரேகையின் முக்கோல்கொண் டுய்வா னடையவரே
குடையவ ரேயறக் கூனி யமுது குடையவரே. (ரு.கூ0)

மிக்கோ, ரேதுக்காட்டல்.

பெண்ணுர் பிரிந்தாள் பிரிந்தா ளெனச்சொற் பிதற்றிவந்தார்
விண்ணுடு காட்டினில் வீணே யலைவதென் வேலெடுத்தோர்
மண்ணுடும் போற்றுங்குன் றக்குடி யாய்பரு வத்தொருவ
ருண்ணுத கேணி சுவைபெறு மோவிவ் வுலகத்திலே. (ரு.கூக)

எயிற்றியோடு புலம்பல்.

மேகம தேறிய வெண்பிறை போற்கொடு வேங்கைநக
மோகையிற் சூடு மெயினர்பெண் ணேமயி லோன்முருகன்
சோகமி லாத மயில்வரை மீதொரு தோகையுமோர்
நாகமுங் கூடி விளையாட லுண்டோ நவிலுவையே. (ரு.கூஉ)

குரவோடு புலம்பல்.

மருவார் குழையணிந் தாய்பூங் கொடியிடை வாய்ந்தனைபூந்
திருவா யினைமுரு கோன்மயில் வெற்பிற் செழுங்குரவே
யிருகா னடையும் வளைக்கையுஞ் சொல்லுமில் லாவியப்பா
யொருபாவை காட்டியொர் பாவையைக் காட்டா துணர்வல்லவே.

சுவடுகேண்டிரங்கல்.

திரண்ட குமரியைக் கைப்பற்றி னூர்சுரத் தீவலஞ்செய்
தரந்தரு சேந்தன் மயில்வெற்பை நீங்கின ருற்றவர்கா
லிரண்டடி நாலடி யாகிய தேபெண் ணிரண்டடிதா
னரண்புரு மெட்டடி யாகிய தேசெய்ய லாவதென்னே. (௩௯௪)

இதுவுமது.

எங்குஞ்செந் தாமரை மேற்று மரையுற் றெதிர்கடம்பு
குங்குமஞ் சந்தங் கொழுந்து மணத்தாற் குளிர்ந்தனவாற்
றங்கு புறவடி மீதுசெங் கைகொண்டு தாங்கியபோ
தங்க விணையடி யிதுசெவ் வேண்மயி லார்வெற்பிலே. (௩௯௫)

கலந்துடன் வருவோர்க் கண்டு கேட்டல்.

உடம்புமுன் னாக வுயிர்பின் னுருவெடுத் துற்றதுபோ
லிடம்பெறுகொங்கையொருவேந்தன்பின்னடந்தேகனுண்டோ
குடம்பைநன் விடெனப் புட்போற் குகன்மயிற் குன்றிடத்தே
நடந்தவர் போல் வரு வீர்நும் வரத்து நலந்தந்ததே. (௩௯௬)

அவர், புலம்ப றேற்றல்.

சுவர்ப்படு பந்தென மீடிமின் னேயவர் சுந்தரனூர்
தவப்புதல் வன்முரு கேசன் மயில்வரை சார்ந்தவர்போ
லுவப்பின ராகி மருவ லரைமுடித் துற்றுதவிக்
கவற்சியில் பேரின்ப மேவ நகர்ப்புறங் கால்வைப்பரே. (௩௯௭)

புதல்வியைக் காணது, கவலை கூர்தல்.

விண்ணாட்டு மங்கைய ரான் மாடி யாடியின் மெய்ம்மறைக்கு
மண்ணாட்டு மாதர் திகழ்வேண் மயில்வெற்பின் மற்றென்கண்
கண்ணோர் குராவு மராவு மராவுங் கராவுமென [டேன்
றன்னோ ரிராவுங் கலையுங் கலையுமென் னுள்ளமுமே. (௩௯௮)

சுப்போடு புணர்ந்த கோவை முற்றிற்று.

---

# இருபத்துமூன்றாவது—மீட்சி.

---

தலைவிசே ணகன்றமை செவிலிதாய்க் குணர்த்தல்.

மாதெனச் சென்றோர் மயில்தொடர்ந் தேனது வான்பறந்த
போதொரு மானைத் தொடந்துசென் றேனது போனதுகான்
வீதி செறிமயில் வெற்பார் செயலென்று மீண்டனன்யான்
போதல்செய் யாதது வானே யவர்சேண் பொருந்தினரே. ()

தலைவன் றம்மூர் சார்ந்தமை சாற்றல்.

வையா புரியுஞ் சரவணப் பொய்கையும் வாயில்செறி
கையா றிரண்டுடை யான்கோயிற் றேரைக் கனங்கிரியு
முய்யா னமுநக ரும்விர வாகு வுடனிடும்பன்
மெய்யான சன்னிதி யும்பா ரிதுநம் வியனகரே. (சOO)

தலைவிமுன் செல்வோர் தம்மோடு தன்வரல்,
பாங்கியர்க் குணர்த்தி விடுத்தல்.

பந்தடி போற்பா விடையா டியகுழற் பண்பினைப்போ
லுந்து மிருவினை யாற்போகந் துய்ப்பா ருடம்பினைப்போல்
வந்து திரும்பிய பாங்கியர்க் கேவேண் மயில்வரைமேற்
சந்தடி பார்த்து வரல்கூறும் வேதத் தலைவர்களே. (சOக)

ஆங்கவர், பாங்கியர்க் குணர்த்தல்.

நல்லதண் ணீரள்ளி யுண்ணு தவரில்லை நன்மலரை
யெல்ல வருமுடிப் பாரத னுலென் னிரங்குதனீர்
கல்விகொள் வேண்மயில் வெற்பி லிருவருங் காடன்செட்டி
செல்வ மணிமண் டபப்படி பார்த்துத் திரும்பினரே. (சOஉ)

ஆங்கவர் கேட்டு, நற்றாய்க் குணர்த்தல்.

அன்னை யெமையிந் நகரார் துணையற் றவரெனவே
சொன்ன பழிமொழி போயின வாற்சுரம் போமிருவர்
மன்னுகுன் றக்குடி வேளை வணங்கி மருதுதுரை
தன்ன தரண்மனை யிற்புசித் தேவரல் சாற்றினரே. (சOங)

நற்றாய் கேட்டவ, னுளங்கோள் வேலனை வினாதல்.

மயில்வரை வேலன் வருவரென் றோதி வருமுருகா
புயலு மொருமின்னுங் காட்டி னடந்த புதுமையுண்டே
யயலவர் காண வகமெய்து மோவயல் வீடெய்துமோ
செயல்பெற்ற மின்கைத் தருமோவின் றேவிது செப்புகவே. ()

மீட்சி முற்றிற்று.

---

## இருபத்துநான்காவது—தன்மனைவரைதல்.

பணிமொழி நற்றாய் மணனயர் வேட்கையிற்,
செவிலியை வினாதல்.

வராம லிருக்கினு மோர்வீட்டுள் ளார்பிறர் மாடத்திலே
யிராம லிருப்பர் குகன்மயில் வெற்பி லிதுவளமாந்
தராதுகொண் டார்பின் கொடாதுசென் றூர்வந்து சார்ந்திந்தவூர்
பராவ மணங்கொண் டிலர்கா வலரென்ற பான்மைநன்றே. ()

### சேவிலிக்கிதுளை, வரைந்தமை யுணர்த்தல்.

சொன்மாலை கொண்டபுலவர்க்குச்சேந்தன்பைந்தோகைவெற்பி
னன்மாலை பைம்பொ னறுந்தூசு தண்டிகை நல்லுணவா
றென்மாலை யீந்து தலைநா ளிகர்நா ளிலைசெய்துநம்
பொன்மாலைக் கேமணந் தந்தாரென் றுற்றர் புகன்றனரே. ()

### வரைந்தமை சேவிலி, நற்றுய்க் குணர்த்தல்.

அருணிதிப் பாலினு மேற்பா ரினுமறி யாமையினன்
மருது துரைபணி சேந்தன் மயூர வரைத்திருவே
யிருவரை யேந்தி யொருவரை யுட்கொண் டிருந்தவளோர்
வரைதலை மேற்கொண் டனளென்று வெஞ்சொல் வழங்கினரோ.

### உற்றுங்கிருவரும், தலைவியில் வந்துழி தலைவன் பாங்கிக், கியான்வரைந் தமைநுமர்க் கியம்புசேன் றேன்றல்.

குன்றக் குடிக்கும ரேசன் பதத்தருள் கொண்டுநன்று
மன்ற னடந்தது சோலையில் லாமலென் மானைபருன்
மின்றகு நுண்ணிடைக் கோது சனத்தை விளம்பவந்றே
வொன்றியநீயெனுங்கொம்பில்லைத்தப்பென்பதொன்றில்லையே. ()

### தானது முன்னே சாற்றிய துரைத்தல்.

வெப்புற்ற கார்வலம் பார்க்கின்ற நாடவிம் மெல்லியலைக்
கைப்பற்றி யேகல்கல் யாணமன் றேவின்று கைப்பற்றினு
ரொப்பற் றவரென்று சொல்வதென் வேண்மயி லோங்கலிவ்வு,
ரெப்பக் கமுமுரைத் தாரெங்கள் போனுன்கை யேற்றவரே. ()

### இதுவுமது.

நானுரைத் தேன்முன்ன மன்றித் தமிழ்கொண்டு நல்குவெகு
மானமுந் தோகை மலைக்கும ரேசர்முன் வைத்தவன்ன
தானமு மஞ்சளும் வாசியும் யானையுந் தையனல்லார்
தேன்மொழி யுங்கண் ணுங் கைகாலு மூரெங்குஞ் செப்பினவே.

தன்மனை வரைதல் முற்றிற்று.

---

## இருபத்தைந்தாவது—உடன்போக்கிடையீடு.

---

### நீங்குங் கிழத்தி பாங்கியர் தமக்குத், தன்சேல வுணர்த்தி விடுத்தல்.

அன்பினிற் காத்தவர்க் கேகாணிக் காசை யளித்தனன்பின்
வன்சொற் செவிலிக்குக் காற்கா சளித்தேன் வருபவரே
துன்குர வற்கொரு காசளித் தேன்குகன் றேகைவெற்பி
லென்சேல விப்படி யானதென் றேதிடு மேழையர்க்கே. ()

தலைமகள், தன்செல வின்றூட் குணர்த்தி விடுத்தல்.

மைக்குயில் கூவ மதன்வருஞ் சேந்தன் மயில்வரைமேற்
கைக்கிளிக் கன்னத்தை யூட்டச்சொல் லீர்கலைக்கேபிடிசேர்த்
திக்கனம்பச்சைப்புன்னீட்டச்சொல் லீரெங்களன்னையைப்பூங்
கொக்கைக் குயிலுக்குக் காட்டச்சொல் லீர்நடக் கும்பலரே. ()

ஈன்றூட் கந்தணர் மொழிதல்.

ஒட்டித் திருட்டைவி சாரித்தி டாம லொருத்தரிடங்
கட்டிக் கொடுக்க நினைத்தத னாலிவள் காட்டொளித்தாள்
செட்டிப்பெயர்கொண்ட வேண்மயில் வெற்பினுன்செங்கைக்கிளி
யெட்டிப் பழந்தின்னு மோகொள்ளுங் கோவை யிகழ்ந்தினியே.

ஈன்றுள், அறத்தோடு நிற்றலிற் றமர்பின் சேறலைத்,
தலைவி கண்டு தலைவற் குணர்த்தல்.

பந்தன கொங்கை யறத்தொடு நின்றிடும் பாவிசொல்லா
லெந்தை யிடத்தன்னை சொன்னள்கொ லேந்த லகத்திருக்குஞ்
சந்தனஞ் சுற்றிய வத்தியு மாவுந் தழையரசுங்
கந்தசு வாமி மயூர வரைசூழ் கடம்படர்ந்தே. (சகச)

தலைமக டன்னைத் தலைமகன் விடுத்தல்.

உருக்கு மணியைத்து வாரகை யான்கொண் டுடன்செல்லுநாட்
டிருக்கு மவளுக்கு முன்னேனைக் கட்டிய தேரிதன்றோ
நெருக்குமுன் றன்னைக்குந் தந்தைக்குஞ் சேனைக்கு நேசமுன்னு
மிருக்குமன் றோகந்தன் மாயூர வெற்பினி லேந்திழையே.(சகரு)

தமருடன் செல்பவ ளவன்புற நோக்கிக், கவன்றரற்றல்.

போர்புரிந் தாற்பழி யென்றூர் குகன்மயிற் பொன்வரைமே
லார்பிரிந் தாரிப் படிச்சேலை சுற்ற வணிகொடிசேர்த்
தார்புரிந் தாரிணை வாழையுங் கட்டியுள் ளாமெனது
தேர்பிரிந் தாரினத் தேரே திரும்பு திரும்பினியே. (சகசா)

உடன் போக்கிடையீடு முற்றிற்று.

---

## இருபத்தாருவது—வரைவு.

---

சென்றேன் மீண்டுவேந்து அந்தணரை (முன்னிடல்.)

கையிரண் டாறுடை யான்மயில் வெற்பிற் கவன்றதுகண்
டுய்தலை யெண்ணித் தமரொடும் பேசி யொருவர்தள்ளா
வையரை மேவிவந் தானுயிர் போல வமைந்தகுண
மெய்யுறு நாலரை மேவ லிவற்கு மிகவெளிதே. (சகஎ)

சான்றோரை முன்னிடல்.

திக்கோ ருடன்புவி யோரு மமரருந் தேடத்தக்க
தக்கோருந் தேடும் விசாகன் மயில்வரைச் சாரலிலே
புக்கோ ருரைத்தசொற் றப்பா ருடனே புகுந்தனரான்
மிக்கோரை நோக்கியன் றேசெய்கு வார்மண மேலவரே. (சகஅ)

அருங்கலந் தருதல்.

சேலாரு மாயன் மருகன் மயூரச் சிலம்பிடத்தே
மேலாகம் மைய ரிறைபோ னளித்த வியன்கனக
மாலார் சரப்பணி சொன்ன வளைமுத்து மாலைகொள்ளுங்
காலாழி கண்டன ரோராழி போலக் களித்தனரே. (சகக)

வரைந்துழிக் கண்டோர் மகிழ்ந்து கூறல்.

சங்கமுங் கைப்பற்றித் தீவலஞ் செய்த தகையுஞ்செங்கை
கங்கைப் புனல்வைத் ததுமாவுந் தேருமுன் கண்டனமே
மங்கல வேண்மயில் வெற்பின் மழுவில்லை மானுமில்லை
யிங்கிவ ரீசனன் றேமங்கை பாக மிசைந்தனரே. (சஉ0)

வரைவு முற்றிற்று.

---

## இருபத்தேழாவது—இல்வாழ்க்கை.

---

தலைவன் தலைவிமுன் பாங்கியைப் புகழ்தல்.

காவேந் தியகுழல் கண்ணுஞ்செங் கையுங் கதிர்நகையு
மாவேந்தர் பொன்னும் பெரியோரு மிவ்வண்ணம் வைத்ததின்றே
பாவேந்தர்க்கன்பன் குகன்றேகை வெற்புறை பாவையென்கைப்
பூவேந்து முன்கையன் றேவிந்த வண்ணம் புரிந்ததுவே. (சஉக)

தலைவனைப் பாங்கி வாழ்த்தல்.

கதிர்மதி போலென்றுங் கன்னி தொடர்சிங்கங் காணுமென்றும்
விதியினிற் சொற்றனிர் வீண்வார்த்தை யின்றி விளைத்தல்செய்தி
ரெதிருற்று வேண்மயில் வெற்பி லிராமனென் றேயிசைத்த
மதுர மொழியிலைத் திர்மன்ன ரென்சொல்வளர்த்தனிரே. (சஉஉ)

தலைவியை, வரையு நாளளவும் வருந்தா திருந்தமை,
உரையா யென்றல்.

ஆர்விட்டிங் மன்றலென் றூர்மெலிந்தாய்பின் னறுபதுநா
ளோர்விட் டிருந்தனை நீங்கா திருப்பதை யுன்னியநீ
கார்விட் டிலாவுங் குகன்மயில் வெற்பர்பின் காட்டல்கண்டு
பார்விட் டிறக்கின பாவியென் கேவைத்துப் பார்த்தனையே. ()

பெருமகளுரைத்தல்.

பொருந்திட முண்டன்மை யுண்டு துணையுண்டு பொய்களுண்டு
விருந்துண் டியமுண்டு சங்குண்டு தேருண்டு வேட்கையென்று
மிருந்திடு நீயுண் டிவருண்டு நானுண் டெலாங்கொடுத்த
மருந்தெனுந் தோகை மலேமே லிருக்குஞ்சு வாமியுண்டே. ()

தலைவனைப் பாங்கி வரையுநா ளளவு,
நிலைபெற வாற்றிய நீர்மை வினுதல்.

கனவினு நீங்கில லெம்மா னுணையெந்தக் காலத்துமுன்
மனமிசை நீங்கிலம் யாமுமி தாக மயின்முருகன்
றனிமயில் வெற்பி லிவள்பாவை நோக்கிச் சலிப்பதுண்டே
யனநடை யைப்பிரிந் தெவ்வண்ண நீதுய ராற்றியதே. (௬௨௫)

மன்றன் மனைவரு செவிலிக் கிகுளை, அன்புற வுணர்த்தல்.

காவும் விழைவும் வரவுங் கொடையுங் கதித்தமயிற்
றேவு மயில்வெற்பு மாயின ரேயன்று தேடியுன்கால்
வாவுங் கிரியுஞ் சுரமும் புறவும் வருந்தச்செய்தார்
பூவு மணமும் பிரிதலுண் டோபெற்ற பூங்கொடியே. (௬௨௬)

வாழ்க்கைநன் றறைதல்.

விண்பார்த்த ஞெக்கி விசும்பு தொழுமயில் வெற்புடையான்
பண்பார்த் தொளிக்குஞ்சொன் மானர்புணர்வேள்பதம்பணிவோ
னண்பார்த்த மங்கை யறிவையென் சொல்வது நன்குணவிற்
கண்பார்த்து மற்றவன் கைபார்த்து நிற்குஞ்சொற் கண்டிலனே. ()

மணமனைச் சென்று வந்த செவிலி,
பொற்றொடி கற்பியனற்றுய்க் குணர்த்தல்.

இசைந்திடுங் காலை முருகன் மயில்வரைக் கேகிவரும்
வசம்பெறு மானம் புரக்குஞ் சரவணை வாவிகுடைந்
தசைந்த விருளுற் றறியாது சேருநண் பாதரிக்கும்
பசுங்கொடிக் காரோ கருங்கொடிச் செய்கை பயிற்றியதே. ()

நன்மனை வாழ்க்கைத் தன்மை யுணர்த்தல்.

நம்மனை வாழ்க்கை யினுமவர் வாழ்க்கை நலங்கனிவா
கும்மனை யன்பிற் படுத்துஞ் செயல்கொடுக் குஞ்செயற்கெ
மம்மனைக் கல்லும் பகலுந் துயிலில்லை யாறுபெற்ற
கம்மனைப் போலு நிலைபெற்ற தோகைக் கனங்கிரிக்கே. (௬௨௯)

அன்னவர் காத லறிவித்தல்

ஒதா திருந்திலர் வேந்தரக் காலு முறநினைப்பார்
தூதே துணையில்வந் தாலும் வருவர் துயர்தலின்றி
மாதேயித் தியாதி பிரிவினுஞ் சேர்தன் மயில்வரைமான்
வேதாந் தியர்மனம் போல்வே றொருதெய்வம் வேண்டிலளே. ()

இல்வாழ்க்கை முற்றிற்று.

—o—

## இருபத்தெட்டாவது—பரத்தையிற்பிரிவு.



காதலன் பிரிவுழிக் கண்டோர் புலவிக்,
கேதுவி தாமிவ் விறைவிக் கென்றல்.

மணிமாட வீதி மயில்வரை வேளை வணங்கிலர்போற்
றுணியா தனதுணிந் தேகினர் மாவென்று சொல்லவுற்று
ரணியார்நறுங்கொங்கையாற்றுங்கொல்லோவன்பில்லாயிழையார்
பணிமே லிருந்தங் கருடனை யேவிட்ட பாவத்தையே. (௪௯௧)

தனித்துழி யிறைவி துனித்தழு திரங்கல்.

காட்டைவி டாதுபின் னாட்டைவி டாது கலந்தவுயிர்
கூட்டைவிட் டோடிற்றையோவெனைப் போல்பவர் கூறினுண்டோ
சூட்டு மயில்வரை யாரரு ளிதெனிற் சொல்வதென்னே
வீட்டில் விருப்பறுத் தாரோ பரத்தை விரும்பினரே. (௪௯௨)

ஈங்கிது வென்னெனப் பாங்கி வினாதல்.

தேன்காணும்பூம்பொழிற்செவ்வேள்மயில்வெற்பிற்சேயிழையுன்
மான்காணு மைக்கண்ணுங் கொங்கையுங் காண மலரணைநீ
நான்காணு மந்தப் புரம்பலர் காணச் சரிக்கிலிது
நான்காணத் தக்கது வோசொல்க சொல்க நறுநுதலே. (௪௯௩)

இறைமகன் புறத்தொழுக் கிறைமக ளுணர்த்தல்.

கொண்டு கழித்தன வானேறுங் குகன்மயிற் குன்றிடத்தே
வண்டு கழித்த மலர்களுண் டேயிந்த மானகரா
ருண்டு கழித்த கலமென்றென் னாரிறை யோர்பலருங்
கண்டு கழித்த குடங்தேடிச் சூளையைக் காத்தனரே. (௪௯௪)

தலைவியைப் பாங்கி கழறல்.

ஆனாலும் பட்சியை வாவிதள் ளாதடி யார்பதவி
மேனாலு மெய்த வருள்வோன் மயில்வெற்பர் வேண்டினர்பாற்
றேனாலுங் கன்னல்விட் டோலையுண் ணுங்கரித் தேசத்தினர்
போனாலும் போவதுண் டோமனத் தாசையும் போகமுமே. ()

தலைவி; செவ்வணி யணிந்து சேடியை விடுத்தல்.

குருட்டின ரானைகண் டாலன்ன பன்மதக் கொள்கையுள்ளோர்
மருட்டினை நீக்கு முருகன் மயூர வரையையன்னு
டிருட்டினர் சென்றிடுஞ் சேரியிற் செல்கெனச் சேடிமின்னு
ரிருட்டினிற் செவ்வ லரிபலர் காண வெழுந்ததுவே. (௪௯௬)

அவ்வணி யுழையர்கண் டழுங்கிக் கூறல்.

பாய்காய்க்குந் தோளுடை மாயன் மருகன் பணிந்தவர்க்குத்
தாய்காய்க்கு மன்பன் மயில்வரை மேவிய தையனல்லார்
நோய்காய்க்கு மாசையி னாலே விடுத்தனர் நொய்யபிள்ளைக்
காய்காய்க்கும் பூவைக் கனிகாய்க்கக் காட்டல் கருத்தல்லவே. ()

பரத்தையர் கண்டு பழித்தல்.

சேவேற் றிடுங்கொடி யார்பணி யார்க்குத் திருக்கொடியார்
கோவேற்ற பிள்ளை குமரன் மயில்வரைக் கொம்பனையார்
காவேற்ற பூங்குழன் மேனு ணெறிந்திக் கடைத்தெருவிற்
பூவேற்ற தன்பருள் வானை மருவப் புரிந்ததுவே. (௪௩அ)

பரத்தைய, ருலகிய னோக்கி விடுத்தல்.

பரத்தையிச் சித்தவர் வீட்டையு ருறென்ற பான்மைதப்பி
வரத்தை யுதவினம் வேண்மயில் வெற்பர் மகிழிறைவா
வுரத்த களிறு மலையூடு போய்த்தரு வுற்றொடித்துத்
திருத்தகு பூஞ்சுனை யாடியுந் தன்பிடி சேர்ந்திடுமே. (௪௩௯)

தலைவன், வரவுகண் டேந்து வாயில்கண் மோழிதல்.

காத்தெனைச்சிந்தையிலெண்ணியநான்கையுங்கைக்கொடுத்தோன்
தேத்தரு வாரு மயில்வரை யார்சிந்தை சீரிதன்றோ
தூர்த்தரை நீத்தனர் பன்னிரு நாள்வரை துய்க்கவல்லி
பூத்தது பார்த்துவந் தார்வடு நீங்கிப் புறநகரே. (௪௪0)

வரவுணர் பாங்கி யரிவைக் குணர்த்தல்.

வாய்க்காற் புனன்மறு வாய்மடை பாய்ந்து வரினுந்தலை
சாய்க்காது செந்நெ லதனல் வெகுநலந் தான்பெற்றதாற்
சேய்க்காசை யுள்ள மயில்வெற்பர் வந்தனர் சென்றெதிர்வாய்
தாய்க்கா னதுபிள்ளைக் குண்டேமன் னர்க்குச் சகசமதே.(௪௪௧)

முதிரா மேன்முலை யேதிர்கோண்டு பணிதல்.

கண்ணுக்குங் கைக்கும் பகைவருமோசெங்கைகண்ணிற்பட்டால்
விண்ணுக்குப்பாதையெனும்வேண்மயில்வெற்பர் வேற்றுமையோ
பெண்ணுக்குப்பேயு மிரங்குமென் பாரிவர் பேரறிவா [றே.
மெண்ணுக்கென் னேசொல்வதின்பமொன்றேயுயிரென்பதொன்

புணர்ச்சியின் மகிழ்தல்.

நிரம்பப் பசித்தவர் சோறுண்டல் போல நிருபர்துய்த்தார்
குரும்பை முலையுந்தன் னீர்த்தாக முற்றவர் கொள்கைபெற்றுள்
விரும்பிய சேந்தன் மயில்வரை யாளொரு மிக்குப்பெற்றாள்
கரும்புகட் டாக வெறும்பு வருமென் கதைப்படியே. (௪௪௩)

இதவும் அதேதாகவிபும் தலைவிகூற்று.

காமக்கிழத்தி, நீத்தமை பொருது நின்றகிழ வோனைப் பழித்தல்.

அன்றிலன் றொரு முளர்பாரி னம்மன்ன ரட்டையன்ற
ரென்றுசொல் வாளு மொருத்தியன் றேவவ ளென்னின்மிக்காள்
குன்றக் குடிக்கும வேசன் பதமலர் கூடிலர்போற்
கன்றி வெகுண்டுசொல் லாதது சொல்லுங் கருத்தென்னிலே. ()

அவனொடு, பாங்கோடு பரத்தையைப் பழித்தல்.

அருளை விரும்பி மறவாத வென்னை யகன்றுசென்றார்
பொருளை விரும்பி மறப்பார் விரும்பப் புகுதல்செய்தார்
முருகன் மயில்வரை யாரன் பவர்மிசை முற்றுங்கொல்லோ
விருவரும் பொய்யன் பினரன்றி யில்லை யியம்புதற்கே. (சசரு)

(காமக்கிழத்தி) மனைவியைப் பழித்தல்.

வந்தார் மறந்தனன் முன்செயல் யாவு மறித்துமங்கே
பிந்தா ரதற்கும் பெருமூச் செறிந்தனள் பேதையிவ
டந்தா வளத்தை விலங்கிடு வாரிற் றடைபுரியா
ளெந்தோ விவள்செய்கை வேண்மயில் வெற்பி லிருப்பவரே. ()

பரத்தையர் காதற் பரத்தையைப் புகழ்தல்.

வாராது வந்த மறிமானை நீக்கி மனையயலா
டாராத வானைக் கொருபிடி யாகுநஞ் சாதிமின்னாள்
பாரா ளவனொடும் வாழ்தனம் வாழ்க்கையின் பண்பையன்றே
சீராரும் வேலன் முருகன் மயூரச் சிலம்பிடத்தே. (சசஎ)

(பரத்தையர்) தம்மையிகழ்தல்.

தீராத நெஞ்சுக்கு தெய்வந் துணையென்று செப்புமொழி
தாரான மாயின தெங்களுக் கோவவர் தங்களுக்கோ
வாராரைச் சீறி வருவாரைத் தேடி மதர்த்தெழுந்தாய்
பாரா தனைக்கொங்கை யேகுகன் றேகைப் பருப்பதத்தே. ()

(பரத்தையர்) கிழவோன் றன்னையும் பழித்தல்.

மின்றகு நுண்ணிடை யார்குண மாறிடை வேசைகுண
மென்ற தவர்க்கு வராதே நடந்துகொ ளின்பமென்றே
மன்றன் முருகன் மயில்வரை சென்று வருமிறைவா
வொன்று மறிவினர் மேலே நடந்தன வுன்புத்தியே. (சசகூ)

(பரத்தையர்) தம்மை (த்தாமே) புகழ்தல்.

மின்னென மாதர் பயிலுங் குகன்மயில் வெற்பவரே
பொன்னனை யாளுமப் பாவையு நங்குலப் பூவையராம்
பன்னுவ தென்னவர் கற்பிற்கு வெஞ்சொற் பகர்தற்கன்றே
மன்னு முலகொரு நால்க் குறளென்று மாற்றியதே. (சருo)

வெள்ளணி யணிந்து விடுத்தல்.

மதுமலர்ச் சோலை யுதிர்மலர் சோதி மதியமுத்த
முதிர்வன போலு முருகன் மயில்வரை யொண்டொடியார்
கதுமென வெள்ளைத் துகிலுமுத் தாரமுங் காட்டிவெள்ளைப்
புதுமலர் சூடிப் பழமலர்ப் பேர்சொல்லிப் போந்தனரே. (சுருக)

புள்ளணி, மாலைவே லண்ணல் வாயில் வேண்டல்.

ஆயிர கோடி யுடுவுதிர்ந் தாலென்ன வார்த்தகவி
பாய மலருகும் பூஞ்சோலைத் தோகைப் பருப்பதத்தார்
தாயினு மன்ப ரருளுண்டு மானருள் சற்றுமுண்டு
சேயின னென்றனி ரன்மைய னுயினன் செப்புகவே. (சருஉ)

தலைவிநேய் யாடிய திருவை சாற்றல்.

தருவார்த்தை யின்றி மறுவார்த்தை பேசிற் றயையிலரைப்
பொருள்வார்த்தைக் காவி சுமவார் நிகரென்று பொய்மறந்தீர்
மருவாற் றிகழ்குகன் மாயூர வெற்பின் மடந்தைக்கென்சொற்
குருவார்த்தை யோபெற்ற பாலானெய் யாடிக் குளித்ததுண்டே. ()

தலைவன் றன்மனத் துவகை கூர்தல்.

அனைக்குமுன் னேதந்தை யார்க்குமுன் னேபெற்ற வையனன்பர்
தனைக்குமுன் னேவருஞ் சேந்தன் மயில்வரைத் தையனல்லாண்
மனைக்குமுன் னேபெற்ற வான்கன்று தூக்கியென் றோமகிழு
மெனக்குமுன் னேயிரு பாற்குடந் தாங்கி யெதிர்கொள்வதே. ()

தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றல்.

தாசானு தாச ரெனத்தேவர் வந்தடி தாழ்ந்துசிவ
பூசா விதிசெயுஞ் சேந்தன் மயில்வெற்பர் பூங்கொடியுன்
பேசாத பிள்ளையைப் பேசுவிக் கும்பிள்ளை பேரிடவுன்
னாசார வாசனுற் றாரறி யேனுன் னருளுள்ளமே. (சருரு)

தலைவி யுணர்ந்து தலைவனோடு புலத்தல்.

பூவென்ற சோலை புவிமே லுடுக்கணம் பூத்ததென
மீவென் றெழுகுகன் றோகைவெற் பீரன்பு வேண்டிவந்தீர்
மாவென்ற கண்ணார் முலைப்பான் மணப்பவ ரென்றிடினுங்
கோவென் றவரென்ன மோவிழி யாமை குறித்தனரே. (சருசு)

பேரியோன், விடுத்துழிப் பாங்கி வாயில் மறுத்தல்.

விண்கா வுறைமந்தி மேனோக்கிப் பாய விரிந்தகனித்
தண்கா வளந்திகழ் வேலன் மயில்வரைத் தையனல்லாய்
மண்பா னடைகொண் டரையுடம் பாகி மதிமுடித்துப்
பெண்பா லிசைந்தவர் வந்தாரென் றோதுதல் பேதைமையே. ()

பாணன் வாயில் மறுத்தல்.

இங்கே யிறையவர் வந்தார் புறத்தொழுக் கில்லையென்று
சிங்காரம் பேசினை வேலன் மயூரச் சிலம்பன்னலா
ரங்கே யிருக்க வவளோ விவளென் னுமப்பதத்திற்
சங்கீதம் பாடினை யாமே பொய்ப் பாணர் நருமநன்றே. (சறுஅ)

பாணன் கூற்று.

வல்லென்ற கொங்கைமின் னேகுகன் றோகை மயில்வெற்பிலே
கொல்லென் றயலவர் கூடின ரேயவர் கூடவப்பாற்
செல்லென்ற போதிடி யுற்றதொத் தேன்சினந் தேயெடுப்பேன்
கல்லென் றனைபடி யாதிருந் தேனருள் காண்பதென்றே. (சறுகூ)

விறலி, வாயில் மறுத்தல்.

பண்ணுஞ் சுரமும் பயின்றிடுங் காலம் பயின்றனமு
னண்ணுஞ் சுரமு மொழியு மறந்தனர் நாளுக்குநாட்
கண்ணுமில் லோமிரு காதுமில் லோமிரு கையுமில்லோம்
பெண்ணுமில்லோம்விற லீகந்தன் றோகைப் பிறங்கலிலே. (சகூ0)

கூத்தர் வாயில் மறுத்தல்.

ஆடிய காலுஞ்சொற் பாடு மிடறுமுள் ளார்கண்மிக்கா
மூட றவிர்த்தவர்க் காவன தேட லுறுதியென்றே
தேடு முருகன் மயில்வெறபர்க் கோதுமின் செப்புமென்போற்
கூடு நகைகொண்டு மேலா டியகழைக் கூத்தர்களே. (சகூக)

விருந்தோடு வந்துழிப் பொறுத்ததுகண், டிறையோன் மகிழ்தல்.

செருந்தொன் று கூந்த லினியென்செய் வாளன்பு சேரினமாம்
விருந்தொன் று வந்தது நெஞ்சே குகன்மயில் வெற்பிலது
பொருந்தென் று சொல்லு மினமே துனியெனும் புன்கணுக்கோர்
மருந்தென் று தேறினிச் செவ்வா யமுத மருந்தல்லவே. (சகூஉ)

இறைமகள் விருந்துகண், டொளித்த வூடல்வெளிப்பட நோக்கிச்,
சீறே லென்றவள் சீறடி தொழல்.

பஞ்சனை மேலஞ்சிச் செல்கின்ற காலைப் பருத்தடக்கை
வெஞ்சின வேழத்தின் மேற்சிலம் பார்த்தன வேர்த்துவிம்மித்
துஞ்சினர் போலு மிளம்பிடி பஞ்சடி தொட்டவன்றே
கஞ்சமுத் தீன்றன செவ்வேள் மயூரக் கனங்கிரிக்கே. (சகூரு)

இஃ, தெங்கையர் காணி னன்றன் றென்றல்.

வேலை விரும்பினர் புன்மொழிற் செய்கல் விகிதமன்றே
மாலுடை யாரென வந்தனை தோகை மயிற்குமரன்
சோலை மயில்வெற்பின் மன்னவ னேசிறுத் தொண்டனென்னக்
காலை முடித்தனை பெங்கையர் காணிற் கலங்குவரே. (சகூச)

அங்கவர் யாரையு மறியே னென்றல்.

மிஞ்சுமென் றுல்வினைக் காரர் பதம்விழில் வெஞ்சினம்போய்
நெஞ்சு குழைவரென் பார்கண்டி லேன்பர னேர்குவரோ
பஞ்சணை மேற்படுப் பார்குகன் றேரகைப் பருப்பதத்தே
கஞ்சத்துத் தண்ணீர் கலிங்கத்துப் பாய்ச்சல் கருணையன்றே. ()

காமக் கிழத்தியைக் கண்டமை பகர்தல்.

வள்ளல்ச மாலி யுடையபணா பாண்டியன் வாழச்செய்த
வெள்ளி மயிலி லெழுந்தருள் வோன்மயில் வெற்பினிலோர்
கள்ளியுன் றுய்தலை மேற்கையு நின்மிசைக் கண்களுமாய்
மெள்ள நகைத்ததுங் கண்டேனுன் வீட்டிலென் மேல்வைப்பிலே.

தாமக் குழலியைப் பாங்கி தணித்தல்.

தேறாத செல்வ முருகன் மயில்வரைச் செல்வனுன்பாற்
கூறா தனசொல்லிச் செய்யா தனசெய்துங் கோபமென்னே
மாறான் மகிழுந் திருமகிழ்ந் தாளின்பம் வாய்த்தபதி
னாறா யிரரன்றி யோர்மானெஞ் சேறி யமர்ந்ததுவே. (சசுஎ)

தணியா ளாகத் தலைமக னூடல்.

சிற்றுளி கற்பிளந் தாலன்ன பின்சொற் சிறந்தனவென்
பற்றுரை சேற்றிடைக் கம்பத்தைத் நேர்ந்ததென் பாவமிதே
கற்றை யழற்சடை யான்மகன் றேரகைக் கனங்கிரிமே
லற்றைப் புனச்சுக மன்றேரகம் விடுற்ற வஞ்சுகமே. (சசுஅ)

அணிவளைப் பாங்கி யன்பிலை கோடியையேன்,
றிணர்த்தார் மார்பனை யிகழ்தல்.

தலைநா ளிடைச்சின மெங்குவைத் தீரயிற் சாமிமயின்
மலைமாதர் முந்தி வரிக்கிலன் பேதை மலிந்துதின்றுற்
பலநாட் கரும்புங் கசக்கு முமையன்றிப் பற்றையில்லா
விலைமாத ரேவிலை யில்லாத மாதர் விரும்புகவே. (சசுகூ)

மகப்போறை கூர்ந்த வண்ண முரைத்தல்.

ஆகம வேத மடிதொழு தேத்துமை யாறுமுகன்
றேரகை மலையில் விளையாடும் பொன்மயில் சூற்கொண்டநாண்
மேகங் கறுத்தது மின்னுந் துடித்தது வேய்பசந்த
பூக மலர்ந்தது தென்னையுங் காய்த்தது போர்மன்னனே. (சஎ௦)

புரவலன் போந்து புதல்வனைக் காண்டல்.

சேனு பதிக்கம் விறல்வாகுக் கீந்துதன் செய்கையெல்லா
மானுத சங்கர லிங்கத் தபோநிதிக் காக்கியவே
டேனர் மயில்வெற்ப ரஞ்சனம் போட்டிலர் செங்கையிலே
பானுறு முன்சொற் பொருளெடுத் தார்பொன் பலகொடுத்தே. ()

புறங்காட்டல்.

ஆன்க ணெழுந்தடி யார்க்கு விடைதந் தருளுமெங்கள்
கோன்கண் மணியெனும் வேளுறை குன்றக் குடிமலைமேன்
மான்கண்ணி யேயின்பப் பாலு மமுதமும் வைத்துக்கொண்டு
தேன்குழ லிந்தனை காமப் பசியதிற் றீர்வதின்றே. (சஎ௨)

காமக்கிழத்தி வாயில்வேண்டல்.

வாக்குங் கிருதாக் கினிஞாய நீங்கு மதிச்சிலைபோ
லாக்கு மனத்தைக் கதிர்ச்சிலை ஞாய மழகதன்றும்
பாக்கு மிளகு மலிகுகன் றேகைப் பருப்பதத்தாய்
தேக்கில நீயெனச் செய்வதென் போல்பவர் செய்வதுவே. (சஎ௩)

பாங்கி வாயில் நேர்வித்தல்.

நித்தட்டு கல்லென்பர் மன்னவை மேல்வரு தென்றல்கண்ட
பூத்தவஞ் சிக்கொடி யாமென்பர் மாதவைப் போர்வயவர்
நீத்திடி லென்கண் டகபால ஞாயத்தை நேர்தனன்றுங்
காத்திகழ் தோகை மலைவேலன் வேலன்ன கட்குயிலே. (சஎ௪)

ஆயிழை மைந்தனு மாற்று மையுமே,
வாயி லாக வரவேதிர் கோடல்.

தேங்கமழ் சோலை மதுரையி லேபண்டு சென்றுசங்கந்
தாங்கிய சங்கை தவிர்த்தோன் மயில்வரைத் தாரண்ணலே
யிங்குனக் கென்றடை யாற்றுமை யும்பெற்ற வென்பிள்ளையு
மூங்கி லனைதழற் போலென் வெறுப்பை முடித்தனவே. (சஎ௫)

மணந்தவன் போயபின் வந்த பாங்கியோ,
டிணங்கிய மைந்தனை யினிதிற் புகழ்தல்.

மறுமார்க்கஞ் செய்தவெஞ் சூரா தியர்க்கு மயிற்குமுத்தி
யுறுசாபஞ் செய்த முருகன் மயில்வரை யொண்டொடியே
தறுகாப் புலிக்குட்டி வீரனன் றேபரி தானுமின்றிச்
சிறுதே ருருட்டிப் பெருந்தே ரனைப்பெண்மை சேர்த்தியதே. ()

தலைவனைப் புகழ்தல்.

பூவிற் கொடுக்குந் தொழில்கொடுப் போர்மெய்ப் புரவலர்க்குங்
காவற் செயலருள் வோர்மயில் வெற்புறை காரிகையே
பாவத்தை வாங்கித்தன் புண்ணியம் பாதி பகிர்ந்தளிக்குந்
தேவர்க்குக் கண்ணிமை யாதுகை நீங்கில சேக்கையினே. (சஎஎ)

சிலைநுதற்பாங்கி, மனைவியைப் புகழ்தல்.

பொருந்தின ரென்றபொழுதேமுன்கொண்டபொறுமையெல்லா
மருந்து கலந்த விடம்போ லொழிந்தன மாதவர்க
டிருந்திய வேலன் மயூர வரையினிற் சேயிழையே
யருந்துதி யென்னி னிகரோ வதுவு மருந்துகியே. (சஎஅ)

பாலனைப் பழித்தல்.

ஆதியி லாக்கிப் புசிப்பன யாவு மளித்தவன்பன்
பேத நினைத்திலன் சேந்தன் மயூரப் பிறங்கலிலே
தாதைகை யாடுந் தனக்குட நீபெறத் தக்கதன்றோ
வோதிய பாற்குடம் பிள்ளாய் விதியின் றுதவியதே. (௪எ௬)

பாத்தையிற் பிரிவு முற்றிற்று.

---

## இருபத்தோன்பதாவது—ஓதற்பிரிவு.



தலைவன்பிரிவறிவுறுத்தல்.

கைம்மலர் வாய்மலர் கண்மலர் கான்மலர் மெய்ம்மலர்த்து
மெய்ம்மலி நாலும் பிறவுங் குகன்மயில் வெற்பிடத்தே
மைம்மலி வேற்கண்ணி சந்தேக மாற்ற மனநினைத்தோ
நெய்ம்மலி கூந்த லிளம்பிடிக் கேசென்று நீசொல்கவே. (௪அ0)

பாங்கி தலைவிக்கதனையறிவுறுத்தல்.

உதவி புரியுந் தலையாய நட்ப ருடல்சிதைத்தார்
பதயுக ளத்திற் கெதிரான தொன்றைப் படுத்தல்செய்தா
ரிதமகி தஞ்செயு நண்பர் மனமறி யேன்முருகன்
மதிதவழ் தோகை மலைநா வலர்பலர் வந்தனரே. (௪அக)

பிரிவுடன் படாமை.

தலையாய நட்ப ருடல்சிதைத் தாரென்ற சாடைநன்று
நிலையா கியநம் முனடநட்பி லாவதென் னேரிழையே
பலதேவர் போற்று முருகன் மயில்வெற்பிற் பண்ணறியுஞ்
சிலையா ருனைபண் ணிருதெய்வ மாகிச் செறிந்ததுவே. (௪அஉ)

பிரிவுடன் படுத்தல்.

மனத்தின் படிவிடு லீலா சுகர்கதை மற்றறிவாய்
வினிக்கை யிசைபசுப் பேய்பாம்பு பாலன் வெறுப்பதுண்டோ
வினத்த விசைத்தெய்வ மேழி லிரண்டை யெழறெரியார்
கனைத்துவண் டார்சுனை வேண்மயில் வெற்பிற்பண் கற்பவரே. ()

பிரிவுடன் படுதல்.

தாரமு நல்ல கிளையும் புகுவார் தடையி னில்லார்
தீர ரகப்பொருள் வாசிப்ப தேநன்று சேந்தன்மயி
லேர்கொண் மலையி லலங்காரம் பாரா திருவருநம்
மூரிற் புறப்பொருண் மேற்கற் பியனெறி யுன்னுவமே. (௪அ௪)

பிரிவுழிக் கலங்கல், (கார்ப்பருவம்.)

பிள்ளையுந் தந்தையும் வந்தா ரெமது பெருங்கவினைக்
கொள்ளைகொண் டாரிருந் தார்கடந் தாரினிக் கூறியென்னும்
புள்ளி மயிற்குகன் றோகை மலையின்முன் பொற்பழிந்த
வெள்ளை முகிலுங் கறுத்தே யுருமி வெளிவந்ததே. (சஅரு)

பாங்கி வன்புறை.

வீறிற் பிரிந்தனர் போகிலர் மாதம் விளங்குமுப்பத்
தாறிற் கழிந்தன கண்டுங் கலங்க லறிவின்மையாந்
தேறற் சிகிவரை வேலனை யுள்ளார் திறமெனவே
தூறித் திரியுமிக் காருக்கென் னேவுண்மை சொல்லுவதே. ()

தலைவி வன்பொறை.

ஓதற் ககன்றே னெழிந்திடை மீண்டன் புடன்கலந்து
போதற் கியையப் புலம்பப் பெருனம் புலம்ப லென்னுஞ்
சோதிக் குகன்மயில் வெற்பானை நொந்து சொலிற்றிரும்பி
வேதத் தினந்தத்தைப்பார்க்கினும்பார்க்குவன்வீண்பெண்மையே.

தலைவன் வருவழிக் கலங்கல்.

வருடமொன் றாகி யொருவரு டத்தை மகிழ்ந்தளியே
னொருவ ருடச்செய லாலோர் வருடத்தை யோட்டுகின்றேன்
முருகன் மயில்வெற்பி லோர்வரு டத்தின் முயற்சிதருங்
கருமுகி லாண்டொன்றை யோராண்ட தாகக் கருதிலவே.(சஅஅ)

வந்துழி மகிழ்ச்சி.

நான்சே ரெழுத்தொடு சொற்பொருள் யாப்பு நயக்குமணி
மீன்சேர்கண் ணாைல்குஞ் சேந்தன் குகன்மயில் வெற்பகத்தே
வான்சேர் நெறியென்ப போய்மீ ளளவுமென் மானங்கொண்ட
கான்சேர் குழற்கு நிகரோ வுலகுள்ள கற்பவரே. (சஅகூ)

ஓதற்பிரிவு முற்றிற்று.



## முப்பதாவது—காவற்பிரிவு.



தலைவன் பிரிவறிவுறுத்தல்.

ஒன்றாகி முப்பத் திரண்டா மறத்திற் குறுகுறையு
நன்றாய தேசத்து நீதியு நாட்டிடை நாடமைதி
யென்றாய செல்வ முதலா னவுமவற் றெய்துகுற்ற
மன்றாக் கலுங்குகன் றோகைவெற் பாள்பவர்க் காய்தலுண்டே.()

### பாங்கி தலைவிக்கறிவுறுத்தல்.

வேத முனிவரர் யாகக் குறைகளும் வேண்டிநின்றோர்க்
கோதிய தேயந் திபாகக் குறைகளு மூர்பலவின்
றீது பலவுந் தவிரக் குகன்மயிற் றின்சிலம்பார்
காதன் மடக்கொடி யேநடந் தாரென்பர் கண்டவரே. (௪௬௧)

### தலைவி பிரிவுடன் படாமை.

தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற் றலைமையருக்
கென்குற்ற மென்ற குறளறி வார்குற்ற மிங்ககற்றோர்
நன்குற்ற சேந்தன் மயில்வரை வேலவர் நாடுகொண்டாற்
பின்குற்ற முள்ளவர் காடுகொள் வாரினிப் பேசலென்னே. (௪௬௨)

### பாங்கி தலைவியைப் பிரிவுடன் படுத்தல்.

சீவகன் றந்தை முயற்சியை நீத்த செயலிலன்றோ
பூவல யத்தைப் புரப்பது விண்டனன் பொற்கொடியே
தேவன் மயில்வெற்பிற் றன்வீடு காக்குந் திறமிலநோர்
காவல ரென்பதெ னென்றோ தலல்ல கருத்தல்லவே. (௪௬௩)

### தலைவி பிரிவுடன் படுதல்.

பல்லார் பயன்றுய்ப்பத் தானே வருந்திப் பகிர்ந்தளித்த
னல்லான் மகற்குக் கடனென்று நாலடி யார்நவின்று
ரெல்லாரும் வாழும் பிரிவிற் கிரங்கலுண் டோதமிழின்
சொல்லார் பிரிவல்ல வேகந்தன் றோகைச் சுரும்பிடத்தே. (௪௬௪)

### தலைவனைப் பிரிவழிக் கலங்கல் (கூதிர்.)

கூடு பதமுந் தலையு முடலுங் குவித்ததிர்ந்து
மேடைக டாவி விழிசாய்த் திறகு விரிக்குமயி
லூடர் குகன்மயில் வெற்பேறி யாங்க ணடுங்கவந்த
வாடை யெனும்புலி யாவிகொள் ளாமுனம் வந்திலரே. (௪௬௫)

### பாங்கி வன்புறை.

கார்வாடை நோக்கி மயிலாடுஞ் சோலைக்கன் னூடர்மன்னன்
றேர்வாடை வந்ததுன் பாவாடைச் சோர்வினைத் தீர்க்கவின்றே
யார்வாடை யாலொழிந் தார்குகன் றோகை யணிவரைமுந்
நீர்வாடி வற்றுங்கொல் லோசிகி மைக்க னெருப்பினுக்கே. (௪௬௬)

### தலைவி வன்பொறை.

குறுந்துளி வாடையும் பல்லறை யோசைக் குளிருமயி
னறுங்கிரி வேளைப் பணியா தவரி னடுநடுக்கும்
வறும்புனம்போ துமுடனுங்கொண்டென்பொறைவைப்பினன்றோ
தெறும்படை வேல ரறப்புறங் காவல் செலுத்துவதே. (௪௬௭)

தலைவன் வருவழிக் கலங்கல்.

வஞ்சிக் கொடிதலை சாய்ப்பதுஞ் டேவரும் வாடைகளே
யஞ்சினு மாடை பதிப்பீர்க ளேகள்ள ரானவர்போன்
மஞ்சு நணிமயில் வெற்புறை வேலை வணங்கினர்போற்
கொஞ்சி வணங்கி யொதுங்கித் துவண்டென்று கூடுவமே. (சகூஅ)

வந்துழி மகிழ்ச்சி.

உரைப்பிர் தமழ்படு பூம்பாவை போல்பவ ருக்கின்றனா
மரப்பாவை போல வருதலை யென்றனம் வந்துசொல்லார்
கருப்பான்மை தீர்ந்த முருகன் மயில்வெற்பிற் கண்ணெனவே
யிருப்பாரைக் காணப் படாரே மகிழ்ச்சி யிராதவரே. (சகூகூ)

காவற் பிரிவு முற்றிற்று.

---

## முப்பத்தோன்றாவது—தூதிற்பிரிவு.

---

இறைவன் பாங்கிக்குப் பிரிவறிவுறுத்தல்.

இருல ரெதிர்ந்தனர் யாதினு மொப்புமை யேற்றவர்நந்
திருவ ரதுநிற்க நம்மினத் தாரெனுந் தேற்றத்தினு
லொருவரிற் சேரப் படாது குகன்மயி லோங்கலன்னீர்
பொருதுக ரத்துணை யிரெழுத் தாகப் புரிந்தனமே. (ரு00)

பாங்கி தலைவிக் கஃதறி வுறுத்தல்.

உய்த்த கயங்களொன் றேடொன்று தாக்கி யுலைதல்கண்டு
கத்தி யுருவி நடந்தார்பல் வேந்தர் கடம்பணிவோன்
முத்தி தருமயில் வெற்பினி னம்மிறை முன்னடந்தார்
மத்தகஞ் சாய்க்க விலக்கின ரென்றனர் வந்தவரே. (ரு0க)

தலைவி பிரிவுடன்படாமை.

பன்னாளும் விட்டுப் பிரியா திருந்தமை பார்த்துமையோ
முன்னே பிரிந்தனர் பின்னே பிரிந்தார் முருகனன்ப
ரென்னாளுந் தோகை மலையிற் பிரிவே யிசைத்தவரையேற்
சொன்னாலுஞ் சொல்லா விடினுநன் றேயிந்தச் சொல்லெனக்கே.

தலைவியைப் பாங்கி பிரிவுடன்படுத்தல்.

தூதா னவர்நல்ல பாக்கினைச் சோற்றினைத் துய்க்கவுநா
மாதே வருந்த விதியோ முருகன் மயூரவெற்பின்
மீதே நயக்கொரு தூதில்லை யோசெயல் வேறிலையோ
பேதாய்செங் கையொடு காலில்லை யோவிப் பெருநிலத்தே. ()

தலைவி பிரிவுடன் படுதல்.

ஆண்டிருந் தான்மனை மின்னுஞ்செய் வார்திங்க ளாயிருந்தான்
மூண்டமு தங்கொணர்ந் தேயளிப் பார்மதி மூன்றிருந்தால்
வேண்டு வனகையி னூலூட்ட வேண்டுஞ்செவ் வேண்முருக
னீண்ட மயில்வெற்பிற் திங்களொன் றேனுண்டு நேர்குவனே. ()

தலைவனைத்தலைவி பிரிவழிக்கலங்கல் (முன்பனி.)

அன்ப னிவனென் றனையக லான்பிரி யானென்றனை
யின்ப னிதயமெட் டேநாளென் றேநினை யெங்கள்குகன்
பொன்பனிக் கின்ற மயில்வரை மீதிற் புகன்மறையோர்
முன்பனிக் கால மகலுமென் றூரம் மொழிநிசமே. (௫0௫)

பாங்கி வன்புறை.

கைச்சமு தாடு கொடுத்த திரண்டிற்குங் காவொன்றது
மிச்சமர் நீக்கப் படாதோ வெனவுனக் கெய்தியதும்
பச்சை மயில்வரைச் சேந்தன்றைப் பூசப் பயிற்சியினு
மிச்சை பெறுமுன் பனிக்காலமென்பது மெண்ணுவரே. (௫0௬)

தலைவி வன்பொறை

வீடுக டோறும் விருந்துண் டிருவரை வேண்டியுற்றூர்
காடுக டோறுஞ் சிவரூப மாவதுங் காணுகிலா
ராடல் புரிகுகன் மாயூர வெற்பி னவர்மெத்தவோ
நீடு மொருத்தி யுயிர்மெத்த வோபுகழ் நேர்தனன்றே. (௫0எ)

தூதுஎதுவாகச் சென்றோ னவ்வினை நின்றுநீட் டித்துழிப், புலந்து புலம்பல்.

ஒழிந்தார் சமர்விருந் துண்டா ரிலைமுன் னுரைத்தவெல்லாங்
கழிந்தா ரவரென் னுங் கத்திகையை நோக்குங் கடம்பணிவோன்
வழிந்தோடுதேறன்மயில்வெற்பையெண் ணுங்கண்மாரிபென் னுஞ்
சுழிந்தோடு வாரியிற் றோணியை நேருஞ் சுகக்கிளியே. (௫0அ)

இறைவன் வருவழிக் கலங்கல்.

போதந் தனங்கல்வி போமாதர் மேன்மனம் பூணிலிந்தத்
தூது புகாவிடிற் சுற்ற மிறைத்தன்மை சோருமன்னே
நாதன் முருகன் மயில்வரை வாவி நளினங்களே
யோதி னளினங்க ளேயல்ல வேகரிந் தூற்றதென்னே. (௫0௯)

வந்துழி மகிழ்ச்சி (கண்டோர்கூற்று.)

வாட்பது மங்கணை மானென் னுங் கன்னி வரல்குறித்துக்
கேட்பது சின்னமென் றூனு மகிழ்ந்தனள் கிட்டுகின்றேன்
மீட்ப துயிரையென் றூனு மகிழ்ந்தனன் மெய்தழுவிச்
சேட்படர் சோலை முருகன் மயூரச் சிலம்பிடத்தே. (௫௧0)

தூதிற் பிரிவு முற்றிற்று.

---

## முப்பத்திரண்டாவது—துணைவயிற்பிரிவு.



### தலைவன் பாங்கிக்குப் பிரிவறிவுறுத்தல்.

வீரகண் டாமணிக் குப்புலித் தோலணை வேண்டுமென்னக்
காரக லாதமின் வேலன் மயில்வரைக் காரிகையாட்
கிர நறும்புன லிட்டோர் குருக்திற் கிடந்தவிழித்
தாரென்ன மன்னென்னைப் போற்றி யிறந்தவ ராரென்னுமே. ()

### பாங்கி தலைவிக்குப் பிரிவறி வுறுத்தல்.

நேற்றுப் பிறைத்தமை கண்டாருன் போது நெடியவெள்ளைக்
கீற்றுப் பிறைமருப் பானை யலங்கரிக் கின்றனர்போ
மாற்றுக் குதிரை பலவாறு சேனை மலிந்தவொற்றர்
கூற்றுக் கொருவரு மானார் குகன்மயிற் குன்றிடத்தே. (ருகஉ)

### தலைவி பிரிவுடன் படாமை.

நாடு நமதன்று நஞ்செல வன்னவர் நல்கலின்று
பாடு படுதன்மன் னுக்கும்பெண் ணுக்குமென் பாருலகோர்
தேடு குகன்மயில் வெற்பர் துணைமேற் செலவையெண்ணு
ருடலை நீக்கிலன் றேபக லோரை யுறுவதுவே. (ருகங)

### பாங்கி தலைவியைப் பிரிவுடன் படுத்தல்.

நட்டவர்க் கும்மடுத் தோர்க்குஞ் சகாய நடத்தினர்க்கும்
விட்டவர்க் குங்குறை யுண்டாகிற் செல்வது வேந்தர்செய்கை
யட்ட வயிற்குகன் றேகைவெற் பாய்கிளை யார்சிலையிற்
பட்டனர் பின்மறுப் பாரா ரனுப்புவர் பாவையரே. (ருகச)

### பிரிவுடன் படுதல்.

தொடைகொடு வாள்கைக் கொடுநீ றுதவுநற் சொற்கொடுகட்
கடைகொடு வாசச் சுருக்கொடென் முணின்ற காரிகைநீ
விடைகொடு போதி மயில்வரை வேலவர் மீட்பரிவள்
கொடுகொடு வென்ன வெடுவெடு வென்றனை கொண்டனையே. ()

### தலைவன் பிரிவுழித் தலைவி கலங்கல் (பின்பனி.)

ஐந்து வகைச்சுற்ற மைங்குழு வோரெட் டமைச்சியுள்ளோர்
முந்தினர் கந்தன் மயில்வெற்ப ராலரன் முற்றினரா
மந்த நகரஞ் சிவக்குமுன் னேவெளுப் பானபுகை
யிந்த நகரம் வளைத்தலிற் பின்பனி யெய்தியதே. (ருகசு)

### பாங்கி வன்புறை.

அரண்முற் றினரென் பதனால் விடிய லமர்பனியால்
வெருவுற் றனைகுகன் மாயூர வெற்பர் விறலறியாய்
வருதற் குரிமையி லேனியுஞ் சீப்புங்கை மாற்றினராம்
பருதியிற் றேன்றுவ ரேற்செய்யு மோபின் பனிதுயரே. (ருகஎ)

தலைவி வன்பொறை.

உலகிய னோக்கி யிறைவர்க் கிரண்டிடை யூறுறுமென்
றலர்முலை மாதரு மெம்மனை மேவ வனுப்பினரே
யிலகயில் வேலன் மயில்வெற்பிற் றேவ ரிருவருக்கு
நிலவு விமானங் கொணர்வார் பொறுத்தற்கெ னேரிழையே. ()

துணை ஏதுவாகச், சென்றோ னவ்வினை நின்றுநீட் டித்துழிப்,

புலந்து பாசறைப் புலம்பல்.

குலமட மாதரிப் பாசறை மேல்வரல் கொள்கையன்றே
நிலைமை பலபட நேர்வர் பலர்சிலர் நேர்ந்திலரே
யலர்மலி சோலை மயில்வெற்பில் வேலனன் பாலளித்த
தலைமைத் தனித்துரை யேவரல் சென்று தனித்துரையே. (ருகசு)

தலைவன் வருவழிக் கலங்கல்.

புகைகண் டடனே யதிர்தர யார்க்கும் புறங்கொடுத்த
மிகைகண்டு வாழ்த்துங்கொல் லோமங்கையூடி வெகுளுங்கொலோ
பகைதணித் தற்குச்சென் றேனக லாத பசைமிகுந்தே
னகல்வதென் னஞ்சுக மேயிர வொன்றெனக் கஞ்சுகமே. ()

வந்துழி மகிழ்ச்சி.

எண்ணுன் கிலக்கண முள்ளவ ரேயெரி யூட்டிமவ்வூர்ப்
பெண்ணாரென் போல்பவர்க்கவ்வா றுநன்றென்ற பேதைநெஞ்சந்
தண்ணகச் சேந்தன் மயில்வெற்பி லேவந்து சார்தனன்றாம்
விண்ணார் பணிப்பகை காமாக் கினிபற்றி வெந்ததுவே. (ருஉக)

துணைவயிற் பிரிவு முற்றிற்று.

---

## முப்பத்துமூன்றாவது—பொருள்வயிற்பிரிவு.



தலைவன் பாங்கிக்குப் பிரிவறிவுறுத்தல்.

அக்கினிட் டோம மிறைசூயஞ் சொல்லய மேதமுதற்
றொக்கபல் வேள்வியு நந்தம் புகழுந் துலங்குதற்கே
தக்கதுன் றக்குடி வேளருட் கொண்டு தருமமில்லா
மக்கள் பலர்கொள் பொருள்கூட்டல் வேதம் வகுத்ததுவே. ()

பாங்கி தலைவிக் கதனைப் பகர்தல்.

தருவேங்கை யாகிக் குறப்பிடி மேவும்வி சாகன்மிக்க
மருவோங்கு சோலை மயில்வரை நாடர் மகிழ்மயினீ
திருவோங்கப் பெற்ற சிறுவேங்கைக்கேமணஞ்செய்யவெண்ணிப்
பெருவேங்கை தேடி வருவேங்கை போடென்று பேசினரே. ()

தலைவி பிரிவுடன் படாமை.

வேண்டும் விருந்திட் டுறுதிகள் கூறிய வேண்மருது
பாண்டியன் பக்க மிருக்கக் குறைகள் பணத்திலுண்டோ
தாண்டு மயிற்பரி யான்றேகை வெற்புந் தமிழ்மதுரை
யாண்டவன் றேசமன் றேவட மேரு வகன்றிலதே. (கூஉச)

பாங்கி தலைவியைப் பிரிவுடன் படுத்தல்.

கொடுக்குந் தொழிலைக் கொடாதோன் கொடுக்கப் புகின்மதுரை
யடுக்க லொருவனம் விரம வேந்திர மாகியநா
ளிடத்திற் பொழிந்த மழையெனு சேர்கில விம்மனைத்திற்
றடைப்படு மோகொடை வேலன் மயூரப்பைஞ் சாரலிலே. ()

தலைவி பிரிவுடன்படுதல்.

மேல்வாரப் பொன்னையென் மேல்வாரம் வைத்தில்லின் மேவச்
பாலார் பிறர்பொன்னைக் கோயிலுங் நாளமும் பற்றநல்கி [செய்து
வேலார் மயின்மனைப் பாங்கற்குந் தம்பிக்கு மிக்கமணங்
கோலா கலத்திற்செய் வேண்டு நிதியங் கொணர்ந்தினியே. (கூஉரு)

தலைவன் இல்லத் தழுங்கல்.

சோற்று முகத்தி னடையினு மார்பினுஞ் சோர்வுகண்டே
னீற்றுமுத் திற்கு நிகராது நல்கு நிதியமென்றாள்
போற்றிய சண்முக வாவி மருதா புரியெனவே
சாற்று குகன்மயில் வெற்பை விடிலின்பந் தானில்லையே (கூஉஎ)

இடைச்சுரத் தழுங்கல்.

வேதிய னீசுர வையன் ப்ரதிட்டை விசுவலிங்க
நாத னமரு முருகன் குகன்மயி னகத்தினர்
நீதியி தன்றுநெஞ் சேநடுக் காட்டி னெறிதப்பல்போன்
மாதை நினைந்தும் பொருளை நினைந்து மயங்கினையே. (கூஉஅ)

தலைவன் பிரிவுழித் தலைவி கலங்கல் (இளவேனில்)

ஆவுங் கலையு மதயானை யுங்கொள்ளை யாடுமெங்குந்
தாவும் பரியு மணிக்குப் பலும்பல சாளிகையு
மேவும் படிவந்த வால்வேன் மயில்வெற் பிறையிருந்தார்
கூவுங் குயிலைக் குரனெரித் தாரன்று கொன்றிலரே. (கூஉகூ)

பாங்கி வன்புறை.

கஞ்சம் புகுந்துமுன் வல்லத்தி லேகையைக் காட்டுகின்றார்
வஞ்சிக் கொடிமயி லேகலிங் கங்கொள்ளை வாய்த்தனராங்
கொஞ்சுகல் யாண மிகத்தேடிக் கைவசங் கொண்டுசென்று
மிஞ்சும் பணமயில் வெற்பாருக் கென்றுமுன் விண்டனரே. ()

### தலைவி வன்பொறை.

புகவந்த பொன்னிற் பொறைசிறி தென்பள் புகழுமுன்று
னகம்வந்து சேர்குவ தாருறென் றோதுவ ளாறுமுகன்
குகன்வடி வேலன் மயில்வெற்பர் கொம்பு குறித்தனர்நீ
சகிசகி யென்பள் சகியே யிவளவஞ் சகியல்லவே. (௫௩க)

### தலைவன் வருவழிப், பாகன் றன்னோடு கூறல்.

கன்றிய காமத்தி னல்வரு மன்னற்குக் காதனன
னன்று கொடிஞ்சியந் தேர்விடக் கற்ற தறிந்தனையோ
வென்றி முருகன் மயில்வெற்பிற் றெவ்வரை வீட்டினன்கூட்
டொன்றில பாதி யுடைவாள் செலுத்திச்செல் லுன்மனைக்கே.
(௫௩உ)

### வருவழிக் கலங்கல்.

தேடச்சென் றோம்பொருள் சென்றன மோசென்ற சென்றவெல்
கூடச்சென் றானன்றி நின்றா னில்லையெதிர் கூங்குயிலே [லாங்
பாடச்சென் றோர்துயர் தீர்போர் மயில்வெற்பிற் பாவைவிளை
யாடச்சென் றான்கொல் வனமோகொல் கண்ணெதி ராயினதே.
(௫௩௩)

### வந்துழி மகிழ்ச்சி.

பொன்மயி லுற்றது பஞ்ச வனக்கிளி புக்கதுவெள்
ளன்ன நடந்தது பூவை யெதிர்ந்த தருள்விரும்புஞ்
சின்னஞ் சிறுகுயி லுண்கொண் டதுபெற்ற சிங்கஞ்செவ்வேண்
மன்னு மயில்வெற்பிற் கல்யாண மாக மகிழ்ந்தனரே (௫௩௪)

(கிளவியில்லாத்துறை.)

### தலைவிமுன் தலைவன் கார்ப்பருவங் கண்டு மகிழ்தல்.

வருமுனென் கைமந்த்ர வாளாய் வரல்கண்டு மற்றவன்கைத்
தருகின்ற வாளென வாகுநின் கண்ணெனச் சாற்றுகின்ற
பரவையுண் மேக முருகன் மயில்வெற்பிற் பாவலர்க்குத்
துரைமரு மேந்தரன் றரல்போற்பொன் மாரி சொரிகின்றதே.
(௫௩௫)

### நாவலர்வாழ்த்து.

வாழி மயில்வரை வள்ளிதெய்வானை மயில்கண்மயில்
வாழி பொருமயில் வாழிகை மேற்கொடி வாழிபதம்
வாழி யருள்சண் முகம்பன் னிருசெங்கை வாழிசெவ்வேள்
வாழி தலத்தொடு தானீகர் வாழிய வாழியவே. (௫௩௬)

மயூரகிரிக்கோவை முற்றிற்று.

வேலு மயிலுந் துணை.

---

கணபதி துணை.

# மயூரகிரிக்கோவை யரும்பதவுரை.



## காப்பு.

அன்பிலார்க்குப் பிந்தாவளம் உகச்செய்யும் ஒரு தந்தாவளமுக வன்ருள்தாம் கோவை சொல்லவுதவும் எனக்கொண்டு கூட்டுக.

பிந்தாவளம் - குறையாதசெல்வம். உக - கெட. தந்தாவளம் - யானை. விக்கினேசுரர் என்ற பெயருக்குத் தன்னைச்சிந்தியாதவர்க்கு விக்கினத்தைச் செய்பவர் என்பதே முற்பட்டபொருளாகலான் விக்கின த்தை முற்படக் கூறினரென்க.

---

(௧) பிடி - நடையாற் பெண்யானை, இடையாற் சிங்கம், நுதலாலம் புலி, முலையாற் களிறு, கண்களான் மான், சாயலாற்றேகை என்க. ஒரு மயில் பிடி முதலாகிய மிருகங்களைப் பகை கடிந்து தாங்கி நிற்கின்ற தென்பது மற்றொருபொருள்.

(௨) தகர் - ஆட்டுக்கடா. தாய் தந்தை - தாய்க்குப்பிதாவாகிய விமயமலை. சந்திரோதயப்பகை என்றது செந்தாமரை, வெண்டாமரை களை. மயிற்பகை என்றது நாகருலகத்தை. வார் - மயேந்திரபுரி. கொண்டது - கடனீர். வாராகக்கொண்ட தேவருலகெனினு மமையும்.

(௩) திரை - திருப்பாற்கடல். செம்மலை என்றது மேருமலையை. நாண்தரை - வாசுகியினுலகமாகிய பாதலம். வெண்பிறை என்றது நெற்றியை. முத்து என்றது வெயர்வையை.

(௪) சுரர் - தேவர். மறையவர் - எதிர்மறுப்புள்ள வசுரர். கஞ்ச ந்தரர் - நாகர். சுரும்பு - மந்தரமலை, உரர் - ஞானிகள். அல்லார் - அஞ்ஞானிகள். பெறும்பேறு - புண்ணிய பாவங்கள். இவை முறையே வெண்மை, கருமைக்குவமை. இருநோக்கிவளுண்கணுள்ள தொரு நோக்கு நோய் நோக்கொன்றன்னேய் மருந்து. என்னுந் திருக்குறள் இங்கு நோக்கத்தக்கது.

(௫) பொன் தங்கத்தாலும், இரும்பு சம்மட்டி முதலிய கருவிகளா லும், நவமணிகள் வயிரவூசிகளாலும் செம்மையாமாறுபோல இம்மன் போல் வாளுந்தானே செம்மைப்படவேண்டுமெல்லாமல் மணிமருந்தாதி களால் ஆவதில்லை என்றவாறு. மருந்திற்றீராது மணியினுகா; தருந் தவமுயற்சியினகாறுமரிதே என்ருர் பிறரும். வயிரவூசியு மயன்வினை யிரும்பும்; செயிரறு பொன்னைச் செம்மைசெய்யாணியும், தமக்கமை கரு

